

சிகாகோவில் ஸ்வாமிகளின் பிரசங்க நிலைமை.

ஷை ஸ்ரீ ஸ்வாமிகளின் விரிவான சரித்திரம்
நமது அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பெற்றுள்ளது.
இதன் விலை ரூபா 4.

உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 15 } சுக்கில௵ மார்கழி௴ ௧௳ / 1929௵ டிசம்பர்௴ 15௳ { பகுதி 6

## கடவுள் வணக்கம்.

காயாத மரமீது கல்லேறு செல்லுமோ
கடவுணீ யாங்க ளடியேம்
கர்மபந் தத்தினாற் சன்மபந் தம்பெறக்
கற்பித்த துன்ன தருளே
வாயார வுண்டபேர் வாழ்த்துவது நொந்தபேர்
வைவது வு மெங்க ளுலக
வாய்பாடு நிற்கநின் வைதிக வொழுங்கினை
வாழ்த்தினாற் பெறு பேறுதான்
ஓயாது பெறுவரென முறையிட்டதாற் பின்னர்
உளறுவது கருமம் அன்றும்
உபயநெறி ஈதென்னின் உசிதநெறி எந்தநெறி
உலகிலே பிழை பொறுக்கும்
தாயான கருணையும் உனக்குண்டெனக் கினிச்
சஞ்சலங் கெடவருள் செய்வாய்
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா னந்த சிவமே. (1)

---

தேவரெலாந் தொழச்சிவந்த செந்தாண் முக்கட்
செங்கரும்பே மொழிக்கு மொழி தித்திப்பாக
மூவர்சொலுந் தமிழ்கேட்குந் திருச் செவிக்கே
மூடனேன் புலம்பிய சொன் முற்றுமோதான். (2)

# அரும்பொருள் விளக்கம்

இதனால் அடிகள் தம் அகத்தே உள்ள சஞ்சலங்கெட அருள் செய்யுமாறு வேண்டுகின்றார்.

(இ-ள்.) எல்லாப் பொருள்களிலேயும் பரிபூரணமாக நிறைந்து வரையறைக்குட் படாத வஸ்துவான உண்மை அறிவு ஆனந்த ரூப சிவமே! ஒரு விண்ணப்பம். காய்த்த மரத்துக்குத்தான் கல்லெறியே பொழிய காய்க்காத மரத்துக்குக் கல்லெறி கிடையாது. அதுபோல நீயோ, அருட்கனி காய்த்து விளங்கும் கடவுள். நாங்கள் உன்னுடைய அடிமைகள். எங்கள் குறைகளையும் முறைகளையும் உன் சன்னிதானத்தில் சொல்லிச் சொல்லித் தொல்லை விளைத்துக் கொண்டேதான் இருப்போம். நல்வினை தீவினைகளாகிய தொடர்பால் பிறவித்தளை பெற உண்டாக்கியது உனது திருவருளே தான். வாய்க்கு ருசியாக உண்டவர் வாழ்த்துவதும், பசியால் நொந்தவர் வைவதும் எங்கள் உலகத்தில் சகஜம். நின்னுடைய திருமுறைகள் எல்லாம் நின்னை வாழ்த்தினால் பெறத்தக்க பேறு தவறாமல் பெறுவர் என்று முறையிடுகின்றன. இங்ஙனமிருந்தும் இதை மதியாமல் மறுபடியும் பிதற்றிக்கொண் டிருப்பது காரியமல்ல. வாழ்த்துவதும் வைவதுமாகிய இரண்டு மார்க்கங்களில் எது சிறந்தது? வாழ்த்துவதே சிறந்தது. உலகில் உயிர்களின் பிழைகளைப் பொறுத்துக் கொள்ளும்படியான—அன்னைக்கிருப்பது போன்ற அருள் உனக்குண்டு. ஆதலால் இனி எனக்கு என்னிடம் குடிகொண்டுள்ள துன்பங்கள் தொலையும்படி கிருபை செய்வாயாக என்பதாம்.

கல்லேறு—கல் எறிதல். கர்ம பந்தம்—வினைக்கட்டு. சன்ம பந்தம்—பிறவித்தளை. வாய்பாடு—முறை, வழக்கம். ஒழுங்கு—இங்கே சாஸ்திரங்களின்மேல் நின்றது. உபயம்—இரண்டு.

(2) இதனால் அடிகள் தம் முறையீடு ஏற்கப் பெறுமோ என்று ஏங்குகின்றார்.

(இ-ள்.) முப்பத்து முக்கோடி தேவர்களும் நாடோறும் வந்து வந்து வணங்குவதால் சிறந்த செவ்விய திருவடி மலர்களையும் மூன்று திருக்கண்களையும் உடைய செங்கரும்புக்கு நிகரான இறைவனே! மொழிக்கு மொழி இனிக்கும்படியான மூவர் தமிழ் கேட்கும் திருச்செவிகட்கு மூடனாகிய நான் புலம்பிய புன் சொற்கள் பொருந்துமோ? என்பதாம்.

மூவர்—அப்பர், சம்பந்தர், சுந்தரர். தமிழ்—இங்கே தேவாரம்.

---




## திரிகரண சுத்தி

உண்பதும், உறங்குவதும், இன்ப நுகர்ச்சியும் எல்லா உயிர்கட்கும் பொது. ஆனால் விலங்கு வாழ்க்கை வேறு, மக்கள் வாழ்க்கை வேறு. விலங்கினங்கட்கு நன்மை, தீமை, ஒழுக்கம், இரக்கம், மானம், ஈனம் முதலியவை கிடையா. மக்கட்கு இவை உண்டு. விலங்குகட்கு உண்பதும், உறங்குவதும் இன்ப நுகர்ச்சியுந்தான் லட்சியம். மக்கட்கு இவையே தனி லட்சியம் அல்ல. இவையே—உலக போகமே லட்சியமானல் விலங்குகட்கும் மக்கட்கும் ஒரு சிறிதும் வேற்றுமை இல்லை. மனிதன் தனக்கு இயற்கையாக அமைந்துள்ள பகுத்தறிவின் சிறப்பால் மாட்சி மிக்க வாழ்க்கையை நடத்தும் நிலைமையில் இருக்கிறான். அன்பு, அருள், ஒழுக்கம், பிறர் நலம் பேணல் முதலிய குணங்களே மனிதத் தன்மையின் உயிர்நாடி.

உலகம் இன்பமும் துன்பமும் கலந்தது. ஒரு மனிதன் ஆயுள் முழுதும் இன்பமோ அல்லது ஆயுள் முழுதும் துன்பமோ அநுபவிப்பதில்லை. இன்பத்தின் முடிவில் துன்பம், துன்பத்தின் முடிவில் இன்பம்—இது தான் வையத்து இயற்கை. ஆனால் நமது முன்னோர்கள் உலக போகத்தை இன்பமாகக் கருதவில்லை. உலகம் துன்ப மயமானது, இதனின்றும் விடுதலை பெற்று நிலையான வீட்டின்பத்தை அடையவேண்டும் என்ற தத்துவத்தையே பிரதானமாக வைத்து வற்புறுத்தி யிருக்கின்றனர். சமய சாஸ்திரங்கள் எல்லாம் இதே கொள்கையைத் தான் முறையிடுகின்றன. மனித வாழ்வின் உண்மை நோக்கம் வீட்டின்பம் பெற முயலுதல் என்ற எண்ணம்

நமது நாட்டு மக்கள் உள்ளங்களில் ஆழமாகப் பதிந்திருப்பது போல் வேறு நாட்டு மக்களிடம் காண முடியாது. ஆன்மார்த்த விஷயத்தில் நமது நாடே உலகத்தில் முதன்மை பெற்று விளங்குகிறது. பிற நாடுகள் எல்லாம் உலகியல் விவகாரங்களில் முதன்மை பெற்று விளங்குகின்றன.

நமது நாட்டு நாகரிகம் மிகப் பழமை வாய்ந்தது. பன்னெடு நூற்றாண்டுகளாக அறிவிலும் அநுபவத்திலும் சிறந்த நமது முன்னோர் உலகப் போக்கின் உண்மையை உணர்ந்து இம்மையின் இழிவும் மறுமையின் சிறப்புந் தோன்றத் தீர்க்க விசாரணை செய்து சாஸ்திரங்கள் வகுத்திருக்கின்றனர். மனிதனிடத்துள்ள மிருகத் தன்மையைக் கொன்று, அவனிடத்தில் தெய்வத் தன்மையை நிலை நாட்டுவதே நமது தத்துவ சாஸ்திரங்களின் நோக்கமாகும். பிரமச்சரியம் முதலிய ஆச்சிரமப் பகுப்பும், சரியை, கிரியை, யோகம், ஞானம் முதலிய அநுஷ்டான முறைகளும் மனிதனிடம் தெய்வத் தன்மையைப் படிப்படியாக நிலைநாட்ட எழுந்தனவே. விலங்கு கட்கு விதி விலக்கு இல்லை. மனிதன் விதி விலக்குகட்குக் கட்டுப்பட்டு வாழ வேண்டியவன். அங்ஙனமின்றி மனம் போன போக்கெல்லாம் போகத் தலைப்பட்டால் மனித சமூக உயர்வு தலை கீழ்ப் பாடமாகிச் சிதைவுறும். மனிதனிடம்—மனித சமூகத்தினிடம் தெய்வத் தன்மை வளர்ச்சி பெற்று விளங்க வேண்டுமானால் யதேச்சையாக—மனம் போனபடி நடவாமல் மனதை அடக்கி ஆளும் உணர்ச்சி வளர்ச்சி பெறவேண்டும். மனதை அடக்குதல் சாமானியமான காரியம் அல்ல. "சிந்தையை அடக்கியே சும்மா இருக்கின்ற திறம் அரிது" என்ற பெரியாரின் திருவாக்கு அனுபவ அமுத வாக்கன்றோ? ஒருவனுக்குச் சிந்தையை அடக்குந் திறம் உண்மையில் சித்தித்துவிடுமானால் அவனுக்கு நிகராக இவ்வுலகில் யாரையும் கூற முடியாது. அல்லும் பகலும் உயிர்களைப் பிடுங்கித் தின்னும் தொல்லைகள்—கவலைகள் அப் பெருந்தகையை ஒன்றுஞ் செய்யா.

மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்பொறிகளும் தத்தம் தொழில்களைச் செய்வதற்கு மனமே காரணமாயிருக்கின்றது. மனம் கர்த்தாவாக நின்று பிரேரேபிக்க மெய் ஸ்பரிசத்தையும், வாய் சுவையையும், கண் பார்வையையும், மூக்கு நாற்றத்தையும், செவி சப்தத்தையும் கிரகிக்கின்றன. மனம் பொறிகளோடு

சம்பந்தப்படாவிடில் அவற்றிற்கு இயக்கமே இல்லாமல் போய் விடும். உலகத்தில் ஒவ்வொரு உயிரும் இன்பத்தையே விரும்புகின்றது. இன்பமாவது ஐம்புலன் நுகர்ச்சி. மெய்க்கு இன்பம் இனிய ஸ்பரிசம், வாய்க்கு இன்பம் இனிய உணவு முதலியன. கண்ணுக்கு இன்பம் இனிய காட்சிகள். மூக்குக்கு இன்பம் நறுமணம், செவிக்கு இன்பம் இனிய ஓசை. இவற்றைத் தேடி அநுபவிப்பதே இவ்வுலகில் இன்ப வாழ்க்கையின் லட்சணமாகக் கருதப்படுகிறது. இவற்றைத் தேடி அநுபவிக்கச் செய்யப்படும் முயற்சிகளில் தான் உலகியல் விவகாரங்கள் எல்லாம் அடங்கி யிருக்கின்றன.

மனம் இன்ப நுகர்ச்சியில் ஆசை வைக்கிறது. இந்த ஆசைக்கு ஓர் அளவு இல்லை—எல்லை இல்லை. பேராசை எல்லாருக்கும் சகஜ குணமாய் அமைந்து விட்டது. இந்தப் பேராசைப் பேய் வாழ்க்கையில் அமைதியை—சாந்தத்தைக் குலைத்து விடுகிறது. பொய், கொலை, களவு, போர், லோபம், கடின சித்தம் முதலியன இப் பேராசையின் பிள்ளைகள் என்றே சொல்லலாம். இந்தத் தீய குணங்கள் நிறைந்துள்ள மக்கள் வாழ்க்கை மாக்கள் வாழ்க்கையே என்பது பிரத்தியட்சம். இதனாலேயே நம் நாட்டுப் பேரறிஞர்—உலகியல் ரகசியம் உணர்ந்த பெரியார் உபதேசங்களின் மூலமாகவும், சாஸ்திரங்களின் மூலமாகவும் மன வொடுக்கம்—புலனடக்கம்—துறவின் சிறப்பைப் பற்றியே விசேஷமாக வற்புறுத்திச் சென்றனர். தனக்கென வாழாமல் பிறர்க்கென வாழுதல், பலனைக் கருதாமல் காரியஞ் செய்தல் முதலிய உயர்குணங்களே மானிட தர்மத்தின் முக்கிய நோக்கமாக வைத்தனர்.

சுயநலமும், பேராசையும் இல்லாத ஒருவனுக்குப் பிறர்நலம் பேணும் தன்மை தானாக அமைந்துவிடுகிறது. அவனுக்கு உலகில் எதிரிகளும் துன்பங்களும் அநேகமாக இல்லை என்றே கூறலாம். உள்ளம் தூய்மையுடையதா யிருப்பதால் அவனிடம் சொல்லொன்று செயலொன்று எக்காலத்திலும் இல்லை. எனவே எல்லோரும் அவனைப் போற்றிப் புகழ்ந்து மரியாதை செய்வர். உள்ளத்தில், பேச்சில், செயலில் தூய்மையுடையாரே திருவருட் பாத்திரர் ஆவார் என்ற உண்மைதான் நம்முடைய சாஸ்திரங்களின் முடிவான சித்தாந்தமாகும். இங்ஙனம் மனம், வாக்கு, காயம் என்ற மூன்று கரணங்களையும் தூய்மையாக வைத்துக் கொள்ளுவதே **திரிகரண சுத்தி** என்று உலகம் புகழ்ந்து பாராட்டுகிறது.

நேயர்களே! தற்கால உலகப் போக்கைச் சற்றே உற்று நோக்குங்கள். ஆன்மார்த்த உணர்ச்சியைப் பெரும்பாலும் அலட்சியம் செய்துவிட்டு நிலையற்ற—பலவிதமான துன்பங்களுக்கும் தொல்லைகளுக்கும் காரணமான—மிருக உணர்ச்சியைக் குறியாகக் கொண்டு நிற்பதே இக்கால இயற்கையாக இருக்கிறது. அன்பும், அருளும், தூய்மையும் நிறைந்து தெய்வத் தன்மை தாண்டவமாடிய இடத்தில் சுயநலமும், சூழ்ச்சியும் பலாத்காரமுமே சூழ்ந்து விளையாடுகின்றன. பரஸ்பர நம்பிக்கையும் சகோதர உணர்ச்சியும் நாளுக்கு நாள் தேய்ந்துகொண்டே போகின்றன. இதற்கெல்லாம் முக்கிய காரணம் மக்கள் சமூகத்தில் திரிகரண சுத்தியும், இதை மக்கள் உள்ளங்களில் ஆழமாகப் பதிய வைக்கும் போதனைகளும் இல்லாமையே யாகும். ஆன்ம போதனைக்குப் பேர்போன நமது நாட்டிலுங்கூட இத்தகைய நிலைமை ஏற்பட்டுவிட்டது வருந்தத்தக்க விஷய மன்றோ?

மக்கள் உள்ளங்களில் நிறைந்துள்ள தீமைகளை—அழுக்குகளை மாற்றித் தூய்மை செய்து தெய்வத்தன்மையை நிலை நாட்டுவது மதம். உலகத்தில் எத்தனையோ மதங்கள் இருக்கின்றன. அவற்றுள் இந்து மதம், இஸ்லாமிய மதம், கிறிஸ்தவ மதம், பௌத்த மதம் முதலியவைகளே தற்காலம் உலகத்தில் பெரும்பான்மை மக்களால் அநுஷ்டிக்கப்படுகின்றன. இந்து மதத்தின் ஒரு பிரிவாகிய—இந்தியாவில் பிறந்த பௌத்த மதமானது, அது பிறந்த இடத்தில் பெருமை குன்றி சைனு, ஜப்பான், சிலோன், பர்மா முதலிய தேசங்களில்தான் அநுஷ்டானத்தில் இருந்துவருகிறது. இப்போது இந்துமதம் என்றால் சைவம், வைணவம், அத்வைதம் ஆகிய மூன்று மதங்களையே குறிப்பதாகப் பெரும்பாலோர் கருதிக்கொண்டிருக்கின்றனர். இது விவகாரத்துக்குரிய விஷயம். இதைப்பற்றி இப்போது இங்கே ஆராய்வதாக நாம் உத்தேசிக்கவில்லை.

சைவம், வைணவம், அத்வைதம் ஆகிய மூன்று மதங்கள்தான் தற்போது இந்துக்களிடையே பெரும்பாலும் நடை முறையில் இருந்து வருகின்றன. இந்த மூன்று மதங்களும் ஆசார அநுஷ்டானங்களில் ஒன்றற்கொன்று மாறுபட்டிருந்தாலும், அநேக அமிசங்களில் அடிப்படையில் பொதுவான தரும லட்சியங்களையே கொண்டிருக்கின்றன என்பதில் யாருக்கும் ஐயமில்லை. இந்த மூன்று மதங்களுக்கும் பிறப்பிடம்—வேதங்கள் ஒன்றே. மக்கள் உள்ளங்களில் திரிகரண சுத்தியை உண்டாக்குவதில் இந்த மூன்று மதங்களும் ஒருமுகமான நோக்கங்கொண் டிருப்பதை யாரே மறுப்பார்?

இந்த மூன்று மதங்களின் தத்துவங்களும் அநாதி என்று சொல்லப்பட்டாலும் இடைக்காலத்தில் அவதரித்து இந்தத் தத்துவங்

களின் உண்மைகளை வெளிப்படுத்திய பெரியோர்களின் பெயரால் இம்மதங்கள் வழங்கப்படுகின்றன. சைவத்துக்கு ஸ்ரீ நீலகண்டரும், வைணவத்துக்கு ஸ்ரீ ராமாநுஜரும், அத்வைதத்துக்கு ஸ்ரீ சங்கரரும் ஆசாரிய புருஷராவர். முற்காலத்தில் இம் மூவருடைய கொள்கைகளையும் உபதேசங்களையும் நாட்டில் பிரசாரஞ் செய்து மக்கள் உள்ளங்களைத் தூய்மைப்படுத்தி, அவர்கட்கு ஆன்ம ஞானம் உண்டாக்குவதற்காக ஆங்காங்கு மடங்கள் ஏற்படுத்தப்பட்டன. இந்த மடங்கட்கு அரசர்களாலும், பிரபுக்களாலும், பொது மக்களாலும் ஏராளமான நிலங்களும் பொருள்களும் மானியமாகவும் காணிக்கையாகவும் கொடுக்கப்பட்டன. இந்த மடங்களின் செல்வாக்கினாலேயே பௌத்தமதத்தின் வேகம் அடங்கி விட்டது என்று சரித்திரங் கூறுகின்றது.

முற்காலத்தில் நமது சைவ, வைணவ, அத்வைத மடாதிபதிகள் கல்வி, அறிவு, அருள், ஒழுக்கங்களில் தலைசிறந்தவராகி, அவ்வப்போது ஒவ்வொரு நகரந்தோறும், கிராமந்தோறும் சென்று சமய தத்துவங்களையும், ஆன்ம ஞானத்தின் சிறப்பையும் உபதேசித்து, மக்கள் திரிகரண சுத்தியில் பற்றுள்ளங் கொண்டு விளங்குமாறு செய்து வந்தனர். நமது நாட்டில் சமய ஞானம் சிறந்திருப்பதற்குக் காரணம் இத்தகைய பிரசாரமேயாகும். இப்பொழுதும் இந்த மடங்களுக்கு லட்சக் கணக்கான வருவாய் வந்துகொண்டுதான் இருக்கின்றது. வந்தும் பயன் என்ன?

நமது முன்னோர்கள் எந்த நோக்கத்தோடு இந்த மடங்களுக்கு இவ்வளவு ஏராளமான பொருள் வருவாய் உண்டாகும்படி ஏற்படுத்தினார்களோ, அந்த நோக்கம், இப்போது அணுவளவும் காரியத்தில் இல்லாமல் இருக்கின்ற விஷயத்தை வருத்தத்தோடு குறிப்பிட வேண்டியிருக்கின்றது. பொதுவாக இக்காலத்திய பெரும்பான்மை மடாதிபதிகளிடம் திரிகரணசுத்தி இருப்பதாகக் கருதக் கூடவில்லை. எந்த மடத்தை நோக்கினாலும் வார்சு உரிமைப் போராட்டம், அது காரணமான கொலைகள், வருஷ முழுவதும் கோர்ட்டு விவகாரங்கள், தங்கள் தங்கள் சுற்றத்தாருக்கு ஏராளமான பொருள் கொள்ளை கொடுக்கின்றார்கள் மடாதிபதிகள் என்ற புகார், கவர்னர் முதலிய சர்க்கார் உத்தியோகஸ்தருக்கு விருந்துகள், வக்கீல்களுக்குக் கொள்ளை, வியபிசாரம், ஆடம்பரம் முதலிய வரம்பு மீறிய செயல்களும், லௌகிக விவகாரங்களுமே மலிந்து கிடக்கக் காணலாம். மத போதனைப் பிரசாரத்துக்காக ஏற்பட்டவை மடங்கள் என்ற எண்ணமே அடியோடு மாறி மடாதிபதிகளின் போக போக்கியத்துக் கென்றே ஏற்பட்டவை மடங்கள் என்ற எண்ணமே எல்லாரும் மனதில் கொள்ளும்படியான நிலைமையில் நம் நாட்டு மடங்கள் நிலவுகின்றன. மதப் பிரசாரத்துக்கு என்று ஏற்பட்ட மடங்களின் கதியே இப்படியானால் சாதாரண மக்கள் உள்ளங்களில் திரிகரண

சுத்தியை எவ்வாறு எதிர்பார்க்க முடியும் என்று சிந்திக்குமாறு வாசகர்களை வேண்டுகின்றோம்.

நம்முடைய மத தத்துவங்களின் உண்மைகளைச் சிரத்தையோடு வற்புறுத்துவோர் இன்மையால் மக்கள் வாழ்க்கை சீர்குலைந்து பல வித இடுக்கண்களுக்கு உட்பட வேண்டிய நிலைமை ஏற்பட்டு விட்டது. பொருளற்ற மூடப் பழக்க வழக்கங்கள் மலிந்து அவையே தான் மதம் என்று சாதாரண ஜனங்கள் நினைத்துக்கொண்டு அல்லற் படுகின்றனர். இதனால் சாதி சமய வேற்றுமைப் பூசல்களும் நாட்டில் ஏராளமாக மலிந்து விட்டன. அந்நிய நாட்டினர் தங்கள் தங்கள் நாடுகளிலிருந்து பெரும் பொருளைத் திரட்டிக்கொண்டு வந்து ஒன்றுமறியாத பாமரமக்களை ஏமாற்றித் தங்கள் மதங்களில் ஆண்டுதோறும் ஆயிரக் கணக்கானவர்களைச் சேர்த்து வருவதும் நம் மடாதிபதிகளின் கண்களைத் திறந்தபாடில்லை. சமூகச் சீர்திருத்தம், தாழ்த்தப்பட்டோர் முன்னேற்றம் என்ற பெயரால் ஒரு சிலர் பிற மதத்தைத் தழுவும்படி பாமர மக்களிடையே தீவிர பிரசாரம் புரிந்து வருகின்றனர். அதன் பலனாகச் சமீப காலத்தில் நமது தமிழ்நாட்டில் நூற்றுக் கணக்கான மக்கள் முஸ்லிம் மதத்தில் சேர்ந்துவிட்டதாகவும் பத்திரிகைகளின் மூலம் தெரிந்திருக்கின்றோம். இவற்றையெல்லாம் கவனித்துத் தக்கது செய்தல் இந்த மடாதிபதிகளின் கடமை அல்லவா என்று வாசகர்களை ஆலோசித்துப் பார்க்குமாறு வேண்டுகின்றோம். தங்கள் போக போக்கியங்களிலேயே கண்ணாக இருக்கும் இவர்கட்கு இதைப்பற்றிய கவலை எங்கிருந்து தோன்றும்?

ஆண்டுதோறும் இந்த மடங்களுக்கு வரும் பல லட்சக் கணக்கான வருவாய்களுக்கு வேலைதான் என்ன? எத்தனை மதப் பயிற்சிக் கழகங்கள், எத்தனை தமிழ்க் கலாசாலைகள் நிறுவக்கூடாது? உண்மையான மதக்கல்வியும் தமிழ்க் கல்வியும் இன்மையாலன்றோ நம் தமிழ் மக்கள் இன்று பிறர் எள்ளி நகையாடத்தக்க ஈனஸ்திதியில் வாழ்ந்து வருகின்றனர்? இந்தக் கேவல நிலைமை என்று ஒழியுமோ தெரியவில்லை.

நேயர்களே! மடாதிபதிகளின் சொத்து, பொது மக்கள் சொத்து. ஆதலால் ஒவ்வொருவரும் இவ்விஷயத்தில் சிந்தை செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறார். பொது மக்கள் இவ்வுண்மையை உணர்ந்து கிளர்ச்சி செய்தால் வெகு எளிதில் மடாதிபதிகளைச் சீர்திருத்திவிடலாம். மக்கள் உள்ளங்களில் திரிகரண சுத்தியை உண்டாக்கும்படியான மதக் கல்வியையும் தமிழ் மொழியையும்—நல்ல பயன் தரத்தக்க முறையில் பரவச் செய்யலாம். ஒவ்வொருவரும் திரிகரண சுத்தியுடன் உழைக்க முற்பட்டால் திருவருள் நம் பக்கம் நின்று துணை செய்யும் என்பதில் ஒரு சிறிதும் ஐயமில்லை. விழிமின்! எழுமின்!




## மத பேதம்.

(சிவானந்தசாகர யோகீஸ்வரர்)

ஆகமத்தைத் தந்திரம் என்பர். அது பற்றிவரும் ஆசாரம் தாந்திரீகம் எனப்படும். ஸ்மிருதி ஸ்மார்த்தம் எனப்படும். அவ்வாசாரம் பற்றி ஒழுகுவோர் ஸ்மார்த்தர் எனப்படுவார். புராணாசாரம் பௌராணிகம் எனப்படும். அவ்வாசார முடையார் பௌராணிகர் எனப்படுவார். வேதாசாரம் வைதிகம் எனப்படும். அவ்வாசார முடையார் வைதிகர் என்றும் சிரௌதர் என்றும் கூறப்படுவார். இவர்கள் எல்லாரும் ஆதியில் அத்வைத மதக்கொள்கை யுடையவர்களாயிருந்தார்கள். பிறகு அவர்கள் தத்தம் ஆசாரம் பற்றி ஒழுகும் மதங்கள் வேறுபட்டன. இவ்வேறுபாட்டினால் ஜனங்களும் வெவ்வேறு ஜாதியாராயினர். இவர்களுள் சைவர் வைணவர், ஸ்மார்த்தர் என்பவர்களே முக்கியமானவர்கள். சைவர் ஆகம முறைப்படி சிவாராதனை செய்வோர். வைணவர் விஷ்ணுவை வழிபடுவோர். ஸ்மார்த்தர்களில் பிராமணர்களே அதிகமானவர்கள். இவரதுகொள்கை அத்வைத மதமாம். சைவ மதத்தில் சாக்தேயம், காணுபத்தியம், கௌமாரம் என்பன பிரதான உட்பிரிவு மதங்களாம்.

இவற்றுள் சாக்தேயம் சக்தியே (உமாதேவி) தெய்வ மென்றும், அந்தச் சக்தியே சகல சராசர மயப் பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்துக் காத்து அழிக்கும் பரம்பொரு ளென்றும், அந்தச் சக்தியை வழிபடுவதே முக்தி மார்க்கமென்றும், அந்தச் சக்தி துர்க்கா இலட்சுமி ஸரஸ்வதி என்று போக ஐசுவரிய மோட்சங்களை அளிப்பதாய் ஏகமாய் விளங்குகிறது என்றும் சாஸ்திரம் கூறும்.

காணுபத்தியத்தில் கணபதி என்கிற விநாயக மூர்த்தியே பஞ்ச கிருத்தியங்களையுஞ் செய்து ஜகத்தை நடத்தும் பரம்பொருளென்றும், அதனை வழிபடுவதே சிறந்த மோட்ச சாதனமாமென்றும் கூறும்.

கௌமார மதத்தில் குமாரக் கடவுள் என்கிற சுப்பிரமணியரே சிருஷ்டி, ஸ்திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகம் என்கிற ஐந்தொழிலையும் நடத்தி ஜகத்துக்கு மூலகாரணமாய் விளங்கும் பரம் பொருளென்றும், அந்தக் குமாரக்கடவுளை வழிபடுவதே முக்திக்குச் சிறந்த மார்க்கமென்றும் கூறப்பட்டிருக்கிறது.

வைணவத்தில் விஷ்ணுமூர்த்தியே பிரத்யும்நன், சங்கர்ஷணன், அநிருத்தன் என்கிற மூன்று சொரூபமாயிருந்து ஜகத்துக்கு மூலகாரணமாய் முக்தியளிக்கும் பரதெய்வமென்றும், அதனை வழிபடுவதே முக்தி மார்க்கமென்றும் கூறப்பட்டிருக்கிறது. ஹிரண்யகர்ப்பமென்று ஒரு ஆகமம் உண்டு. அது ஹிரண்யகர்ப்பன் என்கிற பிரமதேவனே ஜகத் காரணப் பொருளென்று கூறும். அந்த ஆகமத்தையும் அதனைக்கொண்டு பிரமனை வழிபடுவோரையும் இக்காலத்தில் காண்பது அரிது.

இவ்வாகமக் கொள்கைகளைப் பற்றி வழிபடுவோர் அநந்தம் பேர்களாம். இந்த வழிபாடு சவ்யம், அபசவ்யம் என இருவகையாம். சவ்யம் என்பது வைதிக நெறி வழுவாமல் சத்துவ போஜனுதிப் பொருள்களை இட்டுத் தேவனை வழிபடுவதாம். அபசவ்யம் என்பது மதுமாம்ஸம் முதலிய பொருள்களை உபயோகித்து வழிபடுவதாம்.

கௌமார மதத்தில் ஐயனர் முதலிய மதங்கள் அடங்கும். காளி, துர்க்கை முதலியன சாக்தேயத்தில் அடங்கும். காபாலம், களாமுகம், வைரவ முதலியன சைவத்திலடங்கும். இவை சவ்யாபசவ்ய மார்க்கங்களால் தத்தம் குலாசார முறை தவறாமல் ஆராதித்துத் துதிக்கப்படுவனவாம். ஆயினும் சவ்யமார்க்கமே சிறந்ததென்று வேதமுணர்ந்த வைதிகர்களாலும் வைதிக நூல்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்டதாம்.

இனி, குரு, ததீசி, அகஸ்தியர் உபமன்யு என்கிற இந்த நால்வராலும் கூறப்பட்ட சைவாகமங்களுமுள. அவை அந்தணர் செய்யும் சிவாராதனைக்கு ஆதாரமாய் வைதிகமென்று பிரசித்தி பெற்று விளங்குகின்றன. ஆயினும்? இவ்வாகமங்கள் காணப்படுவது அரிதாம். அவை உபதேச மூலமாய் அந்தணரிடம் பரம்பராக் கிரமத்தில் வழங்கி வருகின்றன. இந் நெறி ஆஸ்திகம் எனப்படும். இக்கொள்கை யுடையாரும் ஆஸ்திக ரெனப்படுவார்.

இவ்வாஸ்திகத்துக்கு மறுதலையாய் நாஸ்திகமென்று ஒருமதமும் கேட்கப்படுகின்றது. இக்கொள்கை யுடையாரும் நாஸ்திக ரெனப்படுவார். ஜகம் அநாதி, சிருஷ்டிகர்த்தாவென்று ஒருவன் இல்லை, பாவ புண்ணியங்களுமில்லை, அவற்றின் பயனுகிய நரக சொர்க்கங்களுமில்லை, அதைக் கொடுக்கிற தெய்வமுமில்லை, ஒன்றுமில்லை யென்பதனுல் இவர்கள் நாஸ்திகர் எனப்பட்டார்கள். பூர்வ காலத்தில் நவபங்கி, சத்தபங்கி, திரி யென்று சில நாஸ்திகரிருந்தார்கள். தற்செயல்வாதி என்றும் சுபாவவாதி யென்றும் சில நாஸ்திகர்களிருந்தார்கள். இவர்களுள் சுபாவ வாதியையே வேதம் புகழ்ந்தது இவர்கள் பிரபஞ்சம் சுவபாவமாகவே உண்டாகிறதென்றும், அதற்கு ஒரு கர்த்தனில்லை யென்றும் கூறுவார்கள். தற்செயல் வாதிகள் ஜட ஜீவ அணுக்கள் தற்செயலாகக் கூடி பிரபஞ்சம் உண்டாயிற்று என்பார்கள். இவர்களாலியற்றப்பட்ட பல நூல்களுமுள. சத்தபங்கி நவபங்கிகளில்

சேர்ந்தவர்களே க்ஷமணபௌத்தர்கள் என்பார்கள். இனி மதக் கொள்கைகளை விரித்து எழுதுவதானால் நூல் மிகவும் விரியும். ஆதலால் அவற்றை விடுத்து நாம் எடுத்துக்கொண்ட ஆஸ்திக நாஸ்திகத்தை மாத்திரம் கவனிப்போம். சமயம் நேர்ந்தபோது மற்றவற்றை ஆங்காங்கு விரித்துக் கூறுவோம்.

உலகத்துக்கு அரசரா யிருந்தவர்களும், கொஞ்சங் குறைய உலகத்திலுள்ள ஜனங்கள் எல்லாரும் ஆஸ்திகராகவே இருந்தார்கள். நாஸ்திகர்கள் மிகச் சிறு பான்மையோரேயாவர். நாஸ்திகர்களாலேயே நிறைந்த தேசம் எங்குங் கிடையாது. ஆஸ்திகர்களாலேயே நிறைந்து விளங்கிய தேசம் எங்கு முண்டு. சொற்பஜனங்களுடைய கொள்கையே நாஸ்திகமாம், ஆதலாலந்த வாதம் சிறப்புடைய தல்ல.

அப்படியானால், உலகத்தி லெங்கும் கல்விச் சிறப்பும் பேரறிவும் இல்லாதவரே பெரும்பான்மையோர்; கல்வியிற் சிறந்த அறிஞர் சிலரே. சொற்பதொகையினராகிய அறிஞரை விலக்கிப் பெரும்பாலராகிய அஞ்ஞானிகளையே நாம் பின்பற்ற வேண்டி வருமல்லவா? ஆதலால் இந்த வாதம் பொருத்த முடையதன்று மெனின், நன்று, பெரும்பாலோராகிய சிற்றறிவுடையோரும் சிறுபாலாராகிய அறிஞரை மேன்மைப்படுத்தித் தங்களைத் தாழ்த்திப் பேசிக்கொள்வதை எங்கும் காணலாம். நாஸ்திகர்கூடக் கல்விமான்களை மெச்சிப் பெருமைப்படுத்துவதைப் பார்க்கிறோம். மற்றவர் பட்சத்தில் அவ்வாறு காணப்படவில்லை. அறிஞரையும் மற்றவரையும் திருஷ்டாந்தம் காட்டிப் பேசுவது பொருந்தாது. பெரும்பாலோர் கொள்கையினையே நாம் கைக்கொள்ளவேண்டும். இன்றேல் பலராலுந் தாழ்வாக மதிக்கப்படுவோம்.

தனக்கு மேற்பட்டவர் ஒருவருமில்லை என்று கருதுகிற ஒருவன் பல கொடுந் தொல்லையும் துணிந்து செய்வான். தாய், தந்தை, தமையன், குரு, அரசன் இவர்களுக்கு அடங்கி நடப்பவனே உலகத்தில் கீர்த்திபெற்று வாழ்வது பிரத்தியட்சம். எப்போதும் சுதந்தர மில்லாத ஒருவன் சுதந்தரமுள்ளவன் போல நடப்பது இழிவாம். அஃதெங்ஙன மெனின், ஒவ்வொருவரும் ஜீவனுதார நிமித்தம் மற்றவரிடம் வணங்கி நிற்பது பிரத்தியட்சம். தமக்குத் தெரியாதவைகளைக் கற்றவரிடங் கேட்டுத் தெரிந்து பேசுவதே அறிவுடைமையாம்.

பலராலும் புகழ்ந்து கொண்டாடி அங்கீகரிக்கப்பட்டதை இல்லையென்று மறுப்பவன் புத்திமானாக மாட்டான். ஆதலால் பலராலுங் கொண்டாடப்படும் ஆஸ்திகத்தை இகழ்ந்து சிலராற் கூறப்படும் குதர்க்க வாதத்தைக் கைக்கொள்ளுவது தகுதியாகாது.

ஆயின் ஆஸ்திகத்தாற் பயனுண்டென்பதும் நாஸ்திகத்தாற் பயனில்லையென்பதும் எப்படித் தெரியவரும்? ஆஸ்திகர்கள் கூறுகிற தெய்வம்

முதலியன உண்டென்பதற்குப் பிரத்தியட்சமில்லை. நாஸ்திகர் கூறுவதற்கும் பிரத்தியட்ச மில்லை. ஆதலால் இவ்விரண்டனுள் உண்மையுடையதெது! உண்மையில்லாதது எது? கொள்ளத்தக்கது எது? தள்ளத்தக்கது எது? சரியான நியாய மென்ன?

இந்தக் கேள்வி பொருத்த முடையதே. அதற்கு இங்ஙனம் விடை விடுக்க. ஆஸ்திகர் நல்வினைகளும், அவற்றின் பயனாகிய இன்ப துன்பங்களும் சொர்க்க நரகங்களும், அவற்றைக் கூட்டுவிக்கும் தெய்வமும் உண்டென்று கூறுகின்றார்கள். அவர்களுக்கு வைதிக நூல்களே பிரமாணமாம். நாஸ்திகர் மேற்கூறியவை ஒன்றுமில்லையென்று கூறுகிறார்கள். அவர்களுக்கும் அவர்களுடைய முன்னோர்கள் எழுதிவைத்த நூல்களே பிரமாணமாம். இவற்றுள் எந்த நூலைக் கொள்வது எந்த நூலைத் தள்ளுவது எனின்? கூறுதும்.

புத்திமானா யுள்ளவன் ஆஸ்திகத்தையே கைக்கொண்டு ஒழுகவேண்டும். ஏனெனின், நாஸ்திகர் கொள்கைப்படி தெய்வம் முதலியன இல்லையென்று கொள்வதனால் பல தீமைகள் விளைந்து மறுமையில் துன்பப்பட நேரும். எவ்வாறெனின், நாஸ்திகர் கொள்கைப்படி தெய்வ மில்லாமற் போனாலும், மறுபிறப்பு மில்லாமல் போனாலும், ஆஸ்திக மதாசார முடையவர்களுக்கு ஒரு கெடுதியுமில்லை. தான தர்மங்களால் அவர்களடைந்த கீர்த்தியும் பெருமையும் உலகத்தில் நீடூழி நிலைபெற்று நிற்கும்.

ஆஸ்திகர் கொள்கைப்படி தெய்வமும், சொர்க்க நரகாதிகளும் இருந்துவிட்டால் அந்தோ! நாஸ்திகர் கதி அவகதியேயாம்! நரகத்தில் வேதனைப்படவேண்டிவரும். மறு பிறப்பால் பல அண்டங்கள் தோறும் சுழன்று திரிய நேரும். இப்படிப்படுங் கஷ்டம் அளவிடப்படாது. ஆதலால் தெய்வாதிகள் இல்லா விட்டாலும் ஆஸ்திகத்தைத் தழுவி நடப்பதால் கெடுதியொன்றும் சம்பவியாது. பிரத்தியட்ச மில்லாத விரண்டு கொள்கைகளின் நன்மை தீமைகளைப் புத்தியாலாராய்ந்து தீமையில்லை யென்று காணப்படுகிறதையே கொள்ளவேண்டும். அதுவே புத்திக் கிலக்கணமாம். இல்லையென்பதற்குப் பிரத்தியட்சம் கிடையாது. உண்டென்பதற்கு யாது பிரமாணம்? அதுவே பிரமாணத்தால் சாதிக்கப் படுவதாம் எனின்.

அநாதி தொடங்கிப் பலராலும் அனுஷ்டிக்கப் படுவதும், அவர்கள் தாங்கள் கண்ட காட்சியை எழுதி வைத்திருக்கும் நூல்களும் ஸப்தப் பிரமாணங்களாம். வேறு பிரத்தியட்ச மில்லையோ வெனின்? உண்டு. அதுவே யோகக் காட்சியாம். ஆஸ்திக ஒழுக்கத்தைக் கைக்கொண்டு பெரியோர்களை அடுத்து உபதேசம் பெற்று யோக அப்பியாசம் செய்தால் பிரத்தியட்சமாய்த் தெய்வத்தையும் காணலாம். ஆஸ்திகத்துக்குப் பிரமாணம் யோக மார்க்கமே யாம் என்று தெளிக. (தொடரும்.)

# பக்தியின் சிறப்பு.

(ந. சிவராமகிருஷ்ணன்.)

"பக்தி பண்ணிக் கொண்டிருந்தால்
முக்தி பெறலாமே."

பக்தி யென்பது தெய்வ பக்தி, குரு பக்தி, பித்ரு பக்தி, மாத்ரு பக்தி எனப் பலவகைப்படும். பக்தி என்பது ஐம்புலன்களையும் அல்வழிச் செல்ல விடாமல் மனத்துடன் சேர்த்துச் சிந்தித்தலே யாம்.

அப்பியாசத்தினாலேயே பக்தி சித்திக்கும். இதை விட ஞானம் சிறந்தது என்றாலும் அந்த ஞானத்தை விட தியானமாகிய பக்தியே சிறந்ததென்று கீதையில் பகவான் சொல்லி யிருக்கின்றார். பகவான் பாராட்டிய பக்தியை ஏன் ஒவ்வொருவனும் "நன்மை கடைப்பிடி" என்னும் முதுமொழிப்படி ஏற்றுக்கொள்ளக் கூடாது? அருணகிரி நாதரும் பக்தியின் சிறப்பைக் குறித்து,

"பத்தித் துறையிழிந் தானந்த வாரி படிவதினான்
புத்தித் தரங்கந் தெளிவ தென்றோ?"

என்று ஏங்கி நின்றார். இன்னும் இதை விட மேலானது மானுடர்க்கு எது வேண்டும்? மனிதர் கல்வி பயில்வதெதற்காக? யாவும் புத்தி தெளிவதற்கன்றோ! பின்னும் யோகமார்க்கமாய் வீடு பெறுவதைக் காட்டிலும் பக்தி மார்க்கமாய்ப் பெறுவது மிகவும் லேசானது என்பதை,

"காட்டிற் குறத்தி பிரான் பதத்தே கருத்தைப் புகட்டின்
வீட்டிற் புகுத மிக வெளிதே; விழி நாசி வைத்து
மூட்டிக் கபால மூலாதார நேரண்ட மூர்ச்சை யுள்ளே
ஓட்டிப் பிடித்தெங்கு மோடாமற் சாதிக்கும் யோகிகளே."

என்று காட்டியுள்ளார் அப்பெரியார். பின்னும் அன்னாரே அதன் மகிமையை விவரித்துச் சொல்லுங் காலை

"பெரும்பைம் புனத்தினுட் சிற்றேனல் காக்கின்ற பேதை கொங்கை
விரும்புங் குமரனை மெய்யன்பினான் மெல்ல மெல்ல வுள்ள
அரும்புந் தனிப்பர மானந்தந் தித்தித் தறிந்தவன்றே
கரும்புந் துவர்த்துச் செந்தேனும் புளித்தறக் கைத்ததுவே"

என்றார். அந்த அரும்புந் தனிப்பரமானந்தமே பக்தி.

மணி வாசகப் பெருமான், "பத்தியாய் நினைந்து பரவுவார் தமக்குப் பரகதி கொடுத்தருள் செயும் பித்தன்" என்று கூறி யிருப்பதாலும் பக்தி பண்ணிக்கொண் டிருந்தால் முக்தி பெறலாம் என்பது திண்ணம். மற்றும் "பத்திக் கடலுள் பதித்த பரஞ் சோதி" என்றார். பக்தியை வியந்து பாடாதார் யாரே. இலலிதா த்ரிசதியிலும் "பக்தமானஸ ஹம்ஸிகா" அதாவது பக்தர்களின் மனமாகிய தடாகத்தில் வசிக்கும் அன்னப்புள் என்றும் இலலிதா ஸஹஸ்ரத்தில் "பக்த சித்த கேகி கனா கனா" அதாவது பக்தர்கள் மனமாகிய முகிலைக் கண்டு பரவசப்படும் மயூரமென்றும் வருணிக்கப் பட்டிருக்கிறது.

மணிவாசகரும்,

"முத்தி நெறி யறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்தி நெறி யறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணஞ்
சித்தமல மறிவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
அத்தனெனக் கருளியவா ரூர்பெறுவா ரச்சோவே."

என இரங்குகின்றார்.

வடமொழியில் பரம ஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய ஸ்ரீமத் சங்கரரும் பக்தி ஸ்வரூபத்தைச் சொல்லுங்கால் "அங்கோல விதையானது தரையில் வீழ்ந்து அது செடியாக முளைத்துப் பெரு மரத்தைச் சார்வது போலவும், ஊசியானது காந்தத்தினிடமும், உத்தம பதிவ்ரதை தன் புருஷனிடமும், சிறு கொடியானது விருக்ஷத்தினிடமும், நதியானது சமுத்திரத்தினிடமும் எந்த விதமாய்ச் சேருகின்றனவோ அது போல மனமானது ஈஸனது பாத கமல யுகளங்களில் சதா காலமும் பொருந்தி யிருப்பதுவே பக்தி யென்று சொல்லி யிருக்கின்றார். குழவியைத் தாய் காப்பாற்றக் கடமைப்பட் டிருப்பது போல பக்தனை ஈசன் காக்கக் கடமைப்பட் டிருக்கிறான்.

இன்னும் பக்தியால் செய்யக்கூடாத காரியம் இல்லை யென்பதை ஸ்ரீ சங்கரர் அடியில் வரும் ஸ்லோகத்தால் நன்கு விளக்கியிருக்கிறார்.

"மார்க்காவர்த்திதபாதுகா பசுபதேரங்கஸ்யகூர்ச்சாயதே
கண்டூஷாம்புநிஷேசனம் புராரிபேதிவ்யாபிஷேகாயதே
கிஞ்சித்பக்ஷிதமாம்ஸஸேஷகபளம் நவ்யோபஹாராயதே
பக்தி: கிம்னகரோஹோவனசரோ பக்தாவதம்ஸாயதே."

அதாவது ஆ ஹா! என்ன விசித்ரம்! பல கோடி தரம் வழி நடந்த பழம் பாதரக்ஷை அக் காளஹஸ்தீசுவரருக் குக் கண் புருவ மத்ய ஸ்தானத்தில் சேர்க்கப்பட்டது. திரிபுரதஹன கர்த்தாவுக்கு, மிக்க அருவருப்பான உமிழ் நீர் கங்காபிஷேகத்தினும் சிலாக்கியமானதாயிற்று. உருசியை யுடையதோ வென அச்சங் கொண்டு சிறிது உண்டெஞ்சிய ஊன் துண்டம் புதிய நிவேதனப் பொருளாயது. கிராதகனாகிய வேடன் உத்தமோத்தமனாகிய பக்தனானான். ஆனால் பக்தி என்ன தான் செய்யாது என்பதாம்.

பகவத் கீதையில் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா, பல மார்க்கங்களிலும் தன்னைச் சேருவதற்குப் பக்தி மார்க்கமே சிறந்தது என்றும் பக்தர்கள் தம்முடைய ஸ்தூல திரேகம் விட்டு நீத்தபின் தன்னிடம் ஐக்கியமாவார்கள் என்பதாகவும்

"மய்யேவ மன ஆதத்ஸவ மயிபுத்திம் நிவேஸய
நிவஸிஷ்யஸிமய்யேன, அத ஊர்த்வம் நஸம்ஸய:"

என்ற ஸ்லோகத்தால் வாக்களித்துள்ளார்.

மேற்கூறிய ஆதாரங்களினால் பக்தி நெறியைக் கைவிட்டு வேறு மார்க்கத்தைக் கைக்கொள்ளுதல்—"நல்ல ராஜபாட்டை யிருக்கச் சந்துகளில் செல்வது போலவும், "கனி யிருப்பக் காய் கவர்ந்தது" போலவுமே யாம். மற்ற மார்க்கங்கள் கடினமானதால் கைவிட நேர்ந்து பயனில் உழுவாய் முடியும். ஆதலின் பக்தியே முக்திக்குக் காரணம்.

---

# சங்கீதம்.

துன்றக்குடி-ரா. ம. வே. சுப்பிரமணிய சாஸ்திரிகள்.

(237-ம் பக்கத் தொடர்ச்சி.)

மார்கோதேசீதிதத்வேதா தத்ரமார்க்கஸ்ஸ உச்யதே
யோமார்கிதோ விரிஞ்ச்யாத்யை ꞉ ப்ரயுக்தோ பரதாதிபி ꞉
தேவஸ்ய புரதஸ்சம்போ ꞉ நியதாப்யுதயப்ரத ꞉
தேசேதேசே ஜநாநாம்யத் ருச்யாஹ்ருதயரஞ்ஜகம்
காநஞ்சவாதநம்ந்ருத்யம் தத்தேசீத்யபி தீயதே :
ந்ருத்யம் வாத்யாநுகம்ப்ரோக்தம் வாத்யம் கீதாநுவ்ருத்திச
அதோகீதம் ப்ரதானத்வாத் அத்ராதாவபிதீயதே -சங்கீத ரத்னாகரம்.

மார்கதேசி விபாகேந ஸங்கீதம் த்விதம்மதம்
த்ருஹிணே நயதுத்திஷ்டம் யதுக்தம் பரதேநச
தத்தத்தேசீய யாரீத்யா யத்ஸ்யால் லோகாநு ரஞ்ஜநம்
தேசேதேசேநு ஸங்கீதம் தத்தேசீத்யபிதீயதே

சங்கீதம் மார்க்கமென்றும், தேசியென்றும் இரண்டுவிதம். அதில் ஈசுவர சிருஷ்டியால் உண்டாகி பிரம்மா முதலியவர்களால், "நாட்யஸக்ஞமிதம் வந்தே ஸேதிஹாஸம் கரோம்யஹம்" என்றபடி நாட்யமென்று பெயருடைய இந்த சங்கீத வித்தையை நமஸ்கரிக்கிறேன். நான் விருத்தி செய்கிறேனென்று பிரதிக்ஞை செய்து நான்கு வேதங்களிலும் தேடி விருத்தி செய்யப்பட்டதாயும் பரத முனிவரால் பிரயோகிக்கப்பட்டதாயு மிருக்கிற சங்கீதம் மார்க்கமெனப்படும். அந்தந்த தேசத்து ஜனங்கள் அந்தந்த தேச ரீதியாக ஹிருதயத்தை ரஞ்சிக்கச் செய்யும் சங்கீதம் தேசி யெனப்படும்.

நிருத்யம் வாத்யத்தை யநுஸரித்தது. வாத்யம் கீதத்தை யநுஸரித்தது. ஆகையால் கீதம் பிரதானமா யிருப்பதால் முதலில் சொல்லப்படுகிறது.

## சங்கீத உற்பத்தி

ஸாமவேதாதிதம்கீதம் ஸஞ்ஜக்ராஹ பிதாமஹ: —சங்கீத ரத்னாகரம்.

"வேதாநாம் ஸாமவேதோஸ்மி" நான்கு வேதங்களுள் ஸாம வேதத்தில் நானிருக்கிறேன் என்று ஈசுவரன் சொன்ன பிரகாரம், உத்க்ருஷ்ட, ப்ரதம, த்விதீய, த்ருதீய, சதுர்த்த, மண்ட, ஸ்வார்த்த என்ற பெயருள்ள ஸப்த ஸ்வரங்களையுடையதாயும் வேதங்களுள் சிறப்புற்று விளங்குகிறதாயு மிருக்கிற ஸாம வேதத்திலிருந்து பிரம்மதேவர் ஷட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத்யமம், பஞ்சமம், தைவதம், நிஷாதமென்ற ஸப்தஸ்வரங்களையுடைய கீதத்தை எடுத்துக்கொண்டார்.

ஓங்காரஞ்ச பரப்ரஹ்ம யாவதோங்கார ஸம்பவ:
அகாரோகார மாகார ஏதேஸங்கீத ஸம்பவா:
அகாரோ விஷ்ணுரூபஞ்ச உகாரோ ப்ரஹ்மரூபகம்
மகாரோ பர்கரூபஞ்ச ஸர்வமோங்கார ரூபகம்.

ஓங்காரமானது பரப்பிரம்ம ஸ்வரூபம். அதில் சகலப் பிரபஞ்சமும் உண்டாயிற்று. அதில், அகர, உகர, மகரமென்ற மூன்றெழுத்தால் சங்கீத முண்டா

யிற்று. இதில் அகாரம் விஷ்ணு ஸ்வரூபம் உகாரம் பிரம்ம ஸ்வரூபம் மகாரம் ருத்ரஸ்வரூபம். இந்த மூவருடைய ஸ்வரூபமே ஓங்கார மெனப்படும்.

சங்கீதம் வைதிகைர் வாக்பிர் போதிதம் ப்ராஹ்மணஸ்ஸதா
க்ருத்வைஹிகம் ததாமோக்ஷம் ப்ராப்நுவந்தித்வராங்விதா:

இவ்விதம் வேத வசனங்களால் அறியப்பட்ட சங்கீதத்தைப் பிராமணர்கள் கானஞ்செய்து ஐஹிக சுகத்தையும் மோக்ஷத்தையு மடைகிறார்கள்.

அக்னிஹோத்ரம் யதாகார்யம் கானம்கார்யம் ததைவஹி
வேதோக்தத்வாத் ஸம்ருதி ப்ரோக்தம் கர்த்தவ்யத்வாந்மநீஷிபி:

வேதத்தில் சொல்லப்பட்டதால் வேதத்தை யனுஸரித்த ஸ்மிருதியாலும் சொல்லப்பட்டது, புத்திமான்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்டது. ஆகையால் அக்கினி ஹோத்திரம் எவ்விதம் அவசியம் செய்யத் தகுந்ததோ அது போல் கானமும் அனுஷ்டிக்கத் தக்கது.

"கீதேநப்ரீயதேதேவ: ஸர்வக்ஞ: பார்வதீபதி:
கோபீபதிர நந்தோபி, வம்சத்வ நிவசம்கத:
ஸாமகீதிரதோ ப்ரஹ்மா, வீணாஸதா ஸரஸ்வதீ:
கிமந்யேயக்ஷகந்தர்வ தேவதாநவமாநவா:
அக்ஞாத விஷயாஸ்வாதோ பால: பர்யங்கிகாகத:
ருதந்கீதாம்ருதம் பீத்வா ஹர்ஷோத் கர்ஷம் ப்ரபத்யதே
வநேசரஸ்த்ருணஹாரஸ்சித்ரம் ம்ருகசிசு: பசு:
லுப்தோலுப்தகஸங்கீதே கீதேத்யஜதி ஜீவிதம்" -சங்கீத ரத்னாகரம்.

கானத்தினால் சர்வக்ஞனை பார்வதீ பதியானவர் திருப்தியடைகிறார். கோபீ பதியான நாராயணனும் வேணுகானத்தில் பிரிய முள்ளவர். பிரம்மா ஸாம கானத்தில் பிரிய முள்ளவர். சரஸ்வதி வீணையில் ஆசை யுள்ளவள். இவர்களே கானத்தில் இவ்விதம் ஈடுபட்டிருக்கும் பொழுது யக்ஷ, கந்தர்வ, தேவ, தானவ, மனிதர்கள் விஷயத்தில் கேட்கவேண்டுமோ? எல்லோரும் கானத்துக்கு வசப்பட்டவர்களே. விஷயத்தை யறியாத தொட்டிலில் படுத்துக் கொண்டு அழுகிற சிசுவும் கானத்தைக்கேட்டு அழுகையை நிறுத்தித் திருப்தியை அடைகிறது. வனத்தில் சஞ்சரிக்கிற புல்லை யருந்துகிற மான் குட்டியும் வேடனுடைய சங்கீதத்தில் உயிரையும் விடுகிறது. ஆகையால் "சிசுர்வேத்தி பசுர்வேத்தி வேத்திகாநரஸம்பணி: சிசுவும் பசுவும்-சர்ப்பமும் கானரஸத்தை அறிகிறது என்று புகழப்பட்டிருப்பதால் சங்கீதம் வைதிகமா யிருப்பதோடு பிரபஞ்சத்தின் சிருஷ்டியி லடங்கிய ஆத்மகோடிகளுக் கெல்லாம் ஆனந்தத்தைத் தருவதில் நிகரற்றது.

வேதேதசைவஸம்ப்ரோக்தம் கியதாம்ப்ராம்மணவிதி
க்வணயந்தாவு பௌவீணம் அச்வமேதேதி சுக்ஷரம்

அச்வமேதப் பிரகரணத்தில், ப்ராம்ஹணௌ வீணாகாயிநௌ காயதோ ப்ராம்ஹணோ யோகாயேத். பிராம்மணர்கள் கானஞ் செய்யட்டுமென்று சுருதியிலேயே சொல்லியிருப்பதால் கீதம் அவசியமென்று தெளிவாகிறது.

சிவவிஷ்ணவாதி நாமாநி சுஸ்வரைரந்விதா நிசேத்
பவந்திஸாம துல்யாநி கீர்த்திதாநிமநீஷிபி:

நல்ல கானத்துடன் கூடின சிவ விஷ்ணுவாதி நாமாக்கள் ஸாமகானத்துக்குச் சமானமானது என்று புத்திமான்கள் சொல்லியிருப்பதால் இச்சையுடன் சுசுவராதி நாமாக்களை உச்சரிப்பது நலம். (தொடரும்.)




# வேதாந்த சூடாமணி வசனம்.

(தமிழ்ப் பண்டிதர் பூ. ஸ்ரீநிவாசன்.)

## முன்னுரை.

உலகம் தோன்றிய நாள் தொட்டு அதாவது எப்பொழுது மனிதர் தோன்றினரோ அது முதலே, பெரியோர் இவ்வுலகின் தன்மையை ஆராய்ந்து, இதற்குக் காரணமொன்றிருத்தல் அவசியமாமென்றும், தனக்கொரு காரணத்தைப் பெறாது தானே எல்லாவற்றிற்குங் காரணமான அதினின்றுண்டான காரியமே இவ்வுலகமென்றும், காரியப் பொருள் எத்தனை காலமிருப்பினும் ஒரு காலத்தழியக் கூடியதேயென்றும், அங்ஙனம் தோன்றி நின்றழிதன் மாலையதாகிய இவ் வுலகத்திற் பிறந்த உயிர்களனைத்தும் தனித்து இன்பத்தையோ அன்றித் துன்பத்தையோ துய்த்தலின்றி இன்ப துன்பங்களைக் கலந்தே நுகர்தலால் இங்ஙனம் நுகர்தற்குரிய காரணத்தை ஆராயுமிடத்து அவை புரியும் நல்வினை தீவினைகளாகிய கர்மமே காரணமாமென்றும், அங்ஙனம் துய்க்குமின்பமும் துக்கக் கலப்புடையதாகவே யிருத்தலின் பிறவியே துக்கவேது என்றும், அப்பிறவியின்மையே பேரின்பமயமாம் என்றும், அங்ஙனம் பிறவியறுதற்கு பிறப்பிறப்பற்ற உலக காரண வஸ்துவை எய்தலே ஏற்ற உபாயமாமென்றும், அதனை எய்த வேண்டுமாயின் அதன் தன்மையையும் அதனை யடைய விரும்பும் நமது தன்மையையும் ஆராய்ந்துணர வேண்டுவது அத்தியாவசியமாம் எனவும், எண்ணியாராய்வுழி அது நாமாகவும் நாம் அதுவாகவும் இருப்பதே யன்றி, அதற்கன்னியமாக நாமும் நமக்கன்னியமாக அதுவும் இருத்தலில்லையாயினும் அதன் வடிவமாக விருக்கும் நாம் நமது உண்மைச் சொரூபத்தை அறியாமையால் துன்பக் கடலுளாழ்ந்து கிடக்கின்றோ மன்றி உண்மையை யறியுமிடத்து நமக்குத் துன்பமென்பது எட்டுணையுமின்றென்றும், துன்பமில்லாதிருந்தும் துன்பமிருப்பதாகக் காட்டியும் நமது உண்மைச் சொரூபத்தை அறியவொட்டாது மறைத்தும் நாமல்லாதவற்றை நாமென மயங்குமாறு செய்தும் வருவதாகிய ஒன்று இருக்கிறதென்றும், அதுவே மாயை, அஞ்ஞானம் முதலிய பெயர்களால் அழைக்கப்படுதற்குரியதாமென்றும் நன்கு கண்டு அவ்வஞ்ஞானம் நீங்க மெய்ஞ்ஞானம் அடைதல் வேண்டுமென்றும், அந்த ஞானம் தன் சொரூபத்தை அறிதலேயாம் என்றும், தன்னை அறிந்தபின் தன்னின்

வேறாகாத நிலையினை யறிதல் கூடுமென்றும், ஆகவே, தன் சொரூபத்தை அறிந்து பிறவற்றின் சம்பந்தத்தினின்று நீங்கி அச் சொரூபத்திலேதானே நிலைத்து நிற்போமாயின் காரணவஸ்துவாகிய கடவுளை எய்தியவர்களாவோமென்றும், அதுவே வீடு அல்லது மோக்ஷம் எனப்படுவதா மென்றும் நிச்சயித்து, அதற்குரிய நெறிகளையும் அனுபவவாயிலாக வாராய்ந்து கண்டு, அந்நிலையிலே தானே நின்று கடவுளருள் பெற்று ஜீவ தசையிலே தானே முத்தியின்பத்தை யடைந்து இன்பவடிவினராய் ஜீவன் முத்தராய் விளங்கி, தாம் கண்ட உண்மைகளைப் பிறரும் உணர்ந்துய்யுமாறு உலோகோபகாரமாகப் பல நூல்களின் வாயிலாக அறிவுறுத்திச் சென்றனர். அவைகளே வேதம் முதலிய நூல்களாம். கடவுளருள் பெற்றவர்களாகிய பெரியோரால் தரப்பட்டவையாகலின் அவை கடவுளால் அருளப்பட்டவை யெனவும், அங்ஙனம் காலவரையறை கண்டறிய இயலாமையின் அவை அநாதி என்றும் ஆன்றோரால் அறியப்படுகின்றன.

அத்தகைய அநாதி அபிப்பிராய மென்னும் வேதங்களில் ஞானமே முத்திக்கு வழி எனச் சித்தாந்தப்படுத்திக் கூறும் இறுதிப்பாகம் வேதாந்தம் எனப்படும் (வேத=அந்தம்). எனவே, வேதாந்தம் என்பதற்கு, "வேத முடிவில் பிரதிபாதிக்கப்படுவதாகிய ஞான பாகம்; அதாவது வேதத்தினுடைய முடிவான அபிப்பிராயம்" என்பது பொருளாகின்றது. அதுவே உபநிடதங்களெனப்படும். வேதத்தின் முற்பகுதிகள் ஞானத்திற்கு முன் முன்சாதனங்களாகவுள்ள கர்ம உபாசனைகளை இயம்புவனவாம்.

அவ்வேதாந்த மாகிய உபநிடதங்களை முதனூலாகக் கொண்டு, அவற்றின் கருத்துக்களை விளக்கமாகவும் சுருக்கமாகவும் மந்தருக்கும் பயன்றருமாறு கூறப் பல நூல்கள் பல பெயர்களால் பல பெரியோர்களா லியற்றப்பட்டன. அவற்றுள் 'வேதாந்த சூடாமணி' யென்னும் பெயரிய இந்நூலும் ஒன்றாம். இவ்வேதாந்த சூடாமணி, நிஜகுண யோகி என்னும் பெரியார் கன்னட பாஷையிலியற்றியுள்ள விவேக சிந்தாமணியிலுள்ள வேதாந்த பரிச்சேதத்தையும், அதற்கு ஸ்ரீ வியாச பகவான் செய்த பிரஹ்ம சூத்திரத்திற்கு ஸ்ரீ சங்கரபூஜ்ய பகவத் பாதாசாரிய சுவாமிகள் செய்த வியாக்கியானத்தின் கருத்தைத் தழுவி ஸ்ரீ விவரணாசாரியார் என்னும் பெரியாரியற்றிய உரையையும் பெரும்பாலும் தழுவி எழுதப்பட்டதாம்.

வேதாந்த சூடாமணியின் ஆசிரியர் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளாவர், இவரது காலம் இற்றைக்குச் சற்றேறக்குறைய முந்நூறாண்டுகட்கு முன்னென்ப. பிரபுலிங்க லீலை, (இது ஆனந்தபோதினி வாரவெளியீட்டில் எளிய வசன நடையில் சில வாரங்களாக எம்மால் எழுதப்பட்டுவருகின்றது. வேண்டுவோர் ஆண்டுக் காண்க.) நன்னெறி, சித்தாந்த சிகாமணி, நால்வர் நான்மணி மாலை, வேதாந்த பரிபாஷை, வெங்கைக் கோவை,

வெங்கையுலா முதலிய பல நூல்களை இயற்றியருளிய கவிச்சக்கரவர்த்தி யாராவர். இவரால் இயற்றப்பட்ட பிரபுலிங்க லீலை கற்பனைக் களஞ்சியமாயிருத்தலின் புலவர்களால் பொன்னேபோற் போற்றப்படுதல் பிரசித்தமாம்.

இந்த ஞான வேந்தராலியற்றப்பட்ட இந்நூல் வேதாந்த தாத்பரியங்களைச் சுருக்கமாகவும் விளக்கமாகவும் அறிவித்தலின் வேதாந்தத்திற் பழகுவோரனைவரானும் ஆரம்பத்திற் கற்கப்பட்டுவருவது அனைவரும் அறிந்த விஷயமாம். இத்தகைய நூல் யாவர்க்கும் பயன்படுமாறு 'ஆனந்தபோதினி'யில் எளிய வசன நடையில் எழுதல் வேண்டுமெனப் பல அன்பர்கள் விரும்பினமையின் அவ்வாறே எழுதத் துணிந்தனன். இதற்கு முன் வெளியிட்டுவந்த வேதாந்த சாரசங்கிரக வசனத்தையும் ஏனைய வியாசங்களையும் ஆதரித்து வந்த நண்பர்கள் இதனையும் ஆதரிப்பார்களென்ற நம்பிக்கையுடன் உபாசனமூர்த்தியின் திருவருட்டுணையையும் பெரியோர்களின் அனுக்கிரகத்தையும் ஆதாரமாகக் கொண்டு எழுதத் தொடங்குகின்றேன். பிராந்தி பிரமாதிகளால் பிழைகள் நேரின் அன்பர்கள் மன்னிப்பார்களாக.

இதனை எழுதுமாறு என்னுள்ளத்தினின்று தூண்டிய எங்கும் நிறைந்த எம்பெருமான், இஃது இனிது முடியுமாறு அருள் புரிவாராக.

ஓம். தத் சத்.

---

## நூல்.

### காப்பு.

தருணமா துமைமுகத் தாமரைக் கெழு
மருணனு மெனவுதித் தடியார் பாற்புரி
கருணைமா மதமெனக் காட்டுமாமுகன்
சரணவா ரிசமலர் தலையிற் கொள்ளுவாம்.

'நூல்வரலாறு ஆக்கியோன் பெயர் முதலியவற்றைக் கூறுவனவாகவுள்ள ஆறு செய்யுட்கள் ஈண்டு விடப்பட்டன.) (நூலின் ஆரம்பத்தில், அந்நூல் இனிது முடிதற் பொருட்டு மங்களாசரணம் (கடவுள் வணக்கம்) செய்யப்படவேண்டிய தவசியமாதலின் அம்மங்களா சரணத்தின் வகையினைக் கூறுகிறார். மங்கலம்=விக்கின நாசத்திற் கநுகூலமான வியாபாரம் என்பது விசாரசாகரக் குறிப்புரை.)

நூலாரம்பத்திற் கூறப்படும் மங்களாசரணையானது வாழ்த்து, வணக்கம் பொருளியல் புரைத்தல் என மூன்று வகைப்படும். (இவற்றை முறையே ஆசீர், நமஸ்கிரியை, வஸ்து நிர்த்தேசமென்பர் வட நூலோர்.) 'நமச்சிவாய வாழ்க'' ''பல்லாண்டு பல்லாண்டு'' என்றாற்போலக் கடவுளை வாழ்த்துவதாகக் கூறுவது ஒருவகை. இது வாழ்த்து என்னும் மங்களாசரணமாம். கழல்

வணங்குவாம் என்றாற்போலக் கடவுளை வணங்குவதாகக் கூறுதல் வணக்க மென்னும் மற்றொரு வகை மங்களாசரணமாம். பொருளின் (கடவுளின்) இயல்பை மட்டும் கூறுதல் வஸ்து நிர்த்தேச ரூப மங்களாசரணமாம்.

ஓர் நூலுக்கு உரை கூறுங்கால் அனுசரிக்கவேண்டிய விதிகள் அதாவது வியாக்கியான லக்ஷணங்கள் வருமாறு:—

உரையி னிலக்கணம்:—பதங்களைப் பிரித்தல், பதப்பொருள் கூறல், வாக்கிய யோசனை அதாவது வாக்கியத்தின் முடிபொருளை ஆராய்ச்சி வாயிலாகக் கூறல், அப்பொருளிற் காணப்படும் வினாவைக் கூறுதல், அதற்கு விடை கூறுதல் என ஐந்து வகையாம். இனி,

அவ்வுரையின் கண் சேர்த்துச் சொல்லப்படும் விசேஷணம், விசேஷியம், கர்த்தா, கர்மம், கிரியை என்னும் இவ்வைந்தும் அந்வய லக்ஷணமாம்,

(அந்வயம் என்பது தமிழிலக்கணத்தில் பொருள்கோள் எனப்படும். பொருள் கோளாவது சொற்கள் பொருள்களைக் கொள்ளும் விதமாம்.)

உதாரணமாக :—

"தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட பைங்கூந்தல்
வெண்கோழி முட்டை யுடைத்தன்ன மாமேனி
அஞ்சனத் தன்ன பசலை தணிவாமே
வங்கத்துச் சென்றார் வரின்."

என்னும் ஓர் செய்யுளை எடுத்துக் கொள்வாம் இதற்குப் பொருள் கூற வேண்டின், பொருளுக்கு இசைவாகப் பின்வருமாறு இச்செய்யுளிலுள்ள பதங்களைப் பிரித்துக் கூறப்பட வேண்டும்.

அது வருமாறு:—

'வங்கத்துச் சென்றார்வரின், அஞ்சனத் தன்ன பைங்கூந்தல் மாமேனி (மேல்) தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட கோழி வெண் முட்டை யுடைத்தன்ன பசலை, தணிவாம்' என்பதாம். இதுவே பொருள்கோள் அல்லது அந்வயமாம்.

விசேஷணம் விசேஷியம் கர்த்தா கர்மம் கிரியை என்னு மிவ்வைந்தும் தமிழிலக்கணத்தில் முறையே அடைமொழி, அடைகொளி, எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் எனப்படும்.

உதாரணமாக:—'இராமன் பச்சை மரத்தை வெட்டினான்' என்னுமிடத்து, இராமன் கர்த்தா (எழுவாய்), பச்சை விசேஷணம் (அடைமொழி) அதாவது மரத்தின் தன்மையைக் காட்ட (விசேஷத்தைக் காட்ட) அடுத்து வரும் மொழி, இதில் பச்சை என்னும் பதம் மரத்தின் தன்மையை விசேஷிக்க வந்தது காண்க. விசேஷணத்தால் விசேஷிக்கப்படுவது விசேஷியமாம். அதாவது அடை மொழியால் அடுக்கப்படும் மொழி அடைகொளியாம். இங்கு, மரம் விசேஷியமாம்; பச்சை மரம் கர்மம் (செயப்படு பொருள்); வெட்டினான் கிரியை (பயனிலை); என வறிக.)

### ஆசிரியர் சீடனுக்கு

# உபதேசிக்கும் முறைமை.

தமிழ்ப்பண்டிதர்-ஆ. கமலநாத முதலியார்.

வினா:—சீடன் சுவாமிகளே! நான் சமாதியில் நிற்கும்போது என் மனம் அலையில்லாச் சமுத்திரம் போலவும், காற்றுச் சேராத தீபம் போலவும், தராசு முனையைப் போலவும், நிலையாகிய சமாதியில் அழுந்திக் கிடந்து பேரின்பப் பேற்றைப் பெறும் மார்க்கத்தைத் திருவாய்மலர்ந்தருளும்படியாகப் பிரார்த்திக்கிறேன்.

விடை:—அன்புள்ள மாணவனே! கேட்பாயாக.

"காற்றினை மாற்றிக் கருத்தைக் கருத்தினுள்
ஆற்றுவ தாற்ற லென்றுந் தீபற
வல்லாத தல்ல வென்றுந் தீபற"

என்று பெரியோர் கூறியபடி இடை பிங்கலைகளால் பிராணவாயு நின்று சலிக்கு மளவும் மனமும் ஆன்மாவும் ஒக்கநின்று சீவிக்கு மாகையால் இப்படிச் சலித்துப் புறப்படுகிறவாயு பன்னிரண்டு அங்குலமும் புறம்பே சலியாமல் உள்ளேதானே சுவறும்படி குருவசனத்தினாலே நின்று சாதிக்க மனச் சலிப்பு நீங்கும். இப்படிச் சலிக்கும் விசார மற்றபோதே அவிசாரத்திலே செல்லும். ஆகையால் இந்த விசாரத்தில் விழாமல் தன்னுடைய கருத்துக்குக் கருத்தாய் நிற்கிற தம்பிரானார் திருவடியில் கூடியிருந்து இளைப்பாறுகிறதே பொருள். இப்படிக் கூடுகிற தொழிந்து வேறொரு பிரகாரங்களால் கூடுகிறது என்றும் நிலைநில்லாது.

வினா:—ஆசாரிய சுவாமிகளே! தேவரீர் உபதேசித் தருளிய உபதேச வாக்கியத்தைக் கடைப்பிடித்து அடியேன் நித்தமும் நிட்டையிலிருந்து வருகிறேன். ஆயினும் அந் நிட்டை எனக்குப் பிறவா நெறியைப் பயக்கு மென்பதை நான் எங்ஙனம் உணர்ந்து கொள்வது?

விடை:—அடிக்கடி நினைக்கின்ற எண்ணங்க ளொழிந்து நின்றவிடமே அருள் நிலையாகும். அவ்வருள் நிலையில் நின்றால் உடனே திருவருள் சித்தியாம். தன்மயமா யிருப்பதுவே ஆனந்தம். அவ்வானந்த மயத்தையடைந்தவர்களே பிறவாமையாகிய பெருஞ் செல்வத்தைப் பெற்றவர்கள். ஆகையால் இதனை விடுத்து வீடென்றும் புதல்வர்களென்றும், உறவினரென்றும் சொல்லப்பட்ட அசுத்த வாசனையை ஆசாரியர் உபதேசித்தருளிய ஒரு மொழியைக் கொண்டு நோக்குவாயாக. இம்மொழியே மலத்தைப் போக்கும். இம்மொழியால் நாம் உன்னைக் காண்பிக்க நீ கண்டனை. கண்ட

தன்னையே பொற்சபை யென்றுன்னித் திருவருளை இடமாகக்கொண்டு நிலை பெற்று நில்.

குரங்கைப்போல பிடித்ததைப் பற்றாகக்கொண்டு நித்தமும் இராப் பகலில்லாத இடமே உனக்குத் தகுந்த விடமென்று யாவரும் உணர்ந்து கொள்ளும்படி பறை சாற்று. ஒரு சொல்லே பல சொற்களுக்கும் இடந் தரா நிற்கும். அந்த ஒரு சொல்லே மலங்களைப் போக்கும் எனச் சொன்ன ஆசிரிய வசனமே மலைக்குறி போல்வது. மற்ற வாசகங்களெல்லாம் வகுத்த இடமில்லாமல் வட்டாடலை யொத்திருக்கும் இவ்வாறாக உனக்குக் கருப்ப வாச மென்கிற சொல்லேயில்லை கணுவுக்குக் கணு மதுரிக்கிற கரும்பை யொத்த சொற்களைக் கொண்டே உன்னைக் காணபிக்கவும் நீ தெரிசித்தனை. இப்படியாயின் பின் உனக்குப் போதித்தற்குரிய சொற்களில்லை. ஆகலால் இனி, உன்னைவிட்டு நீங்காத தற்பரமாகவும் இன்பப் பொற்சபையாகவும் நிற்கக் கடவாய்.

வினா:—ஆசிரியரே! ஆன்மாக்கள் தீட்சையும் சிவஞானமும் பெற்று நிட்டை சாதித்து வருகையில் தேகம் நழுவிற்றானல் பின்னர் எங்ஙனமாம்?

விடை:—அப்பொழுது இந்தத் தேகத்திலே நிற்கும்போதே கூடின அசேதனமான புண்ணிய பாவங்கள் இரண்டும் இவன் பின்னொரு தேகத்தை எடுத்த பொழுதே ஒக்கச்சென்று கூடாநிற்கும். ஒருவன் சிவதீட்சையும் சிவஞானமும் பெற்றுத் தெளிந்திருக்கும் போதேயும் முன்புபோல உயிர்ச் சார்புகளின் பற்று விடாமல் ஜனனங் கூடிற்றேனும், கர்த்தாவாகிய சிவனும் இவனைக் கைவிடாமல் முன்புண்டான மனம் பற்றுகைக்குத் தக்கவற்றைக் கூட்டித் தொலைப்பித்து, முன் ஜனனத்திலே சாதித்த குறையிலே வந்து எடுத்துக்கொண்டு நிட்டையிலே கூட்டிச் சாயுச்சியத்தைக் கொடாநிற்பன். இவன் காருண்ணிய சத்தியினை எப்பொழுதும் தன்னிடத்திலே உடையனாதலால் என்க. இதைப்பற்றி—திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார்,

இன்றிங் கசேதனமா மிவ்வினைக ளோரிரண்டும்
சென்று தொடருமவன் சென்றிடத்தே—என்றுந்தான்
தீதறுவ னாற் சிவபதிதான் கைவிடுமோ
மாதொரு கூறல்லனோ மற்று

என்று கூறியதைக் கொண்டு தெளிக.

வினா:—ஆசிரியரே! இறைவன் செய்தருளும் பஞ்ச கிருத்தியத்தினால் உயிர்களுக்கு என்ன பயன்?

விடை:—உயிர்களுக்கு விஷய அறிவென்றும் சொரூப அறிவென்றும் இரண்டு உண்டு. இவ்விரண்டறிவையும் ஆணவமலமானது விடய ஆவாரக மென்றும், சொரூப ஆவாரக மென்றும் இரண்டு கூறாகி நின்று மறைக்கும். இவ்விருளினால் அவ்வுயிர்கள் தம்மையும், பரம சிவத்தையும், சிறிதேனும் அறியா. இதற்குத் திருஷ்டாந்தம் கூறுவாம்.

பித்தமயக் குள்ளவன் விஷத்தினாலே மூர்ச்சித்துள்ள போது ஒருவன் வந்து கருணையினால் முன்னிருந்த பித்தமயக்கிற்குத் தகுதியான மருந்து கொடுத்து, அம் மயக்கத்தைத் தவிர்த்துச் சுகம் பொருந்தியிருக்கும்படிச் செய்யுந் தன்மைபோல இருளிற் பொருந்தியிருக்கும் உயிர்களுக்குத் தனு கரண புவன போகங்களை மாயையினிடமாகக் கொடுத்து இருளாகிய விடய ஆவாரகத்தை முன்னம் நீக்கிச் சுருதியினாலும் குருவினாலும் அனுபவத்தினாலும் சொரூப ஆவாரகத்தையும் மாற்றிச் சுகத்தைத் தந்தருளுவன்.

வினா:—ஆசிரியரே! உயிர்களும் உயிர்களை மறைக்கும் ஆணவ மலமும் ஒரு தன்மைத்தா யிருக்கக் கடவுள் விஞ்ஞானகலர்களுக்கு உடல் முதலியனவைகளைத் தந்தது போலப் பிரளயாகலர் சகலர் என்னு மிருவர்களுக்கும் தாராதது ஏன்?

விடை:—உயிர்களும் ஒரு தன்மையே, அவ்வுயிர்களை மறைக்கும் ஆணவ மலமும் ஒரு தன்மையே, இறைவனும் பட்சபாத மில்லாதவனே. ஆனால் விஞ்ஞானகலர்களுக்கு உடல் முதலானவற்றைத் தந்தது போலப் பிரளயாகலர் சகலர் என்னு மிருவர்களுக்கும் தந்தால் என்ன குற்றமென வினவுதற்கு உத்தரம் கூறுகின்றோம். இயல்பான கண்களில் படலம் மூடியிருக்குமானால் அந்தப் படலமாகிய பிணியின் குணங்களை நன்கறிகின்றவன் தனையினால், மணியினாலும் நல்ல மருந்தினாலும் ஊசியினாலும் கண்களை ஒன்றும் செய்யாமல் படலத்தை நீக்குவான். அதுபோல உயிர்களை மூவகையாகச் செய்து பரமசிவன் ஆணவ மலத்தை நீக்குவார்.

வினா:—ஆசிரியரே! உடலோடு கூடியிருக்கும் உயிர்களிடம் இறைவன் பஞ்சகிருத்தியங்களை எங்ஙனம் நிகழ்த்துகின்றனன்?

விடை:—இன்பங்களையும் துன்பங்களையும் அனுபவிக்கச்செய்தல் திதியாம். உயிர்களின் கண்களுக்குத் தோன்றுபவைகளை யெல்லாம் ஒடுக்குதல் சங்காரமாம். மிகுந்த சிருஷ்டி திதி சங்கார மென்பவைகளுக்குள் பலநாள் உழன்றும், வெறுக்காமல் ருசிக்கும்படிச் செய்தல் திரோபவமாம். இவ்வாறு அநித்தியமும் நித்தியமுமாகிய பொருளைப் பகுத்துத் தெரிவிப்பது அனுக்கிரகமாம். தொடர்ச்சியுள்ள சடம் சித்து என்பவைகளுக்கும் விசாலமாகிய தொழிலும் அறிவும் தோன்றும். இதனாலன்றோ ஆன்றோர் எல்லாம் பரமசிவம் அசைத்தால் அணுவும் அசையுமென்று கூறுகின்றனர்.

வினா:—ஆசிரியரே! உயிர்களுக்கு இறைவன் ஐந்தவத்தையிலும் முத்தொழில் இயற்றும் முறைமை யெங்ஙனம?

விடை:—சகலாவஸ்தை சிருஷ்டி, கேவலாவஸ்தை சங்காரம், சுத்தாவஸ்தை திதியாம்.

சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீத மென்னும் இவற்றுள் முதலிற் சொல்லிய சாக்கிராவஸ்தையிலும் சொப்பனாவஸ்தையிலும்

சுகமும் துக்கமு முண்டாம். சுழுத்தி முதலாகிய மூன்றவத்தையிலும் துக்கமே யுண்டாம்.

வினா:—ஆசிரியரே! இறைவன் உட்கரணங்களிடத்து ஐந்தொழிலியற்றும் முறைமையினைத் தெரிவிக்கப் பிரார்த்திக்கின்றேன்.

விடை:—சாக்கிராவஸ்தையில் ஐம்புலன்களை யுண்ணும்பொழுது பஞ்சேந்திரியங்களிலும் பஞ்ச கிருத்தியங்களும் வந்து பொருந்தும். அவைகளை இங்குச் சொல்லு மிடத்தில் முன்னாகச் சொல்லுகின்ற இந்திரியத்தைப் பொருந்தினதே சிருஷ்டி, மிகுந்த விஷயத்தை அருந்தினதே திதி. அவ்விஷயத்தை அறியுந்தன்னை வேறு பிரித்துச் சொல்ல வொண்ணாமல் அதில் அருந்துதல் சங்காரம். இவ்விடயங்களை ருசிப்பித்தலே திரோபவம். இனிதன்று என வுணர்தலே அனுக்கிரகம்.

ஏதாவது ஒரு பொருளை நினைந்து எழுதல் சிருஷ்டி. அதனை நினைந்து மகிழ்ச்சி யடைதல் திதி. அந்தப் பொருளை மறந்திருத்தல் சங்காரம். அந்தப்பொரு ளின்னதென்று ஞாபகத்திற்கு வாராமல் மயங்குதல் திரோபவம். பின்பு அந்தப் பொருளைத் தெளிந்தறிதல் அனுக்கிரகமாம். இவ்வாறு ஒவ்வொரு கருவிகளில் உயிரானது கலந்திருக்கும் போதெல்லாம் பரமசிவனுடைய பஞ்ச கிருத்தியமு முள. முன் சொல்லிய முறைமை அறியுமிடத்தில் கரணங்களினிடத்தில் மூன்றும் உயிர்களினிடத்தில் இரண்டுமாகப் பொருந்தும். எவ்வாறெனில் முன்னம் பஞ்ச கிருத்தியங்களும் உடலுக்கும் உயிருக்கும் சொல்லியதுபோல வென வறிக.

# தெய்வம் ஒன்றுண்டு

(புளிச்சாக்குளம், N.M. லெப்பை.)

தரையையும், ஜலத்தையும் ஒரு உண்டைவடிவாய் ஒருங்கே திரட்டி அந்தரத்திலே ஒருவித ஆதாரமுமின்றி ஓயாது சுழன்று நிற்குமாறு செய்த வல்லவன் யார்? அவ்வுண்டையிலே பலவகைப் பேதப்பட்ட, உயிருள்ளனவும் இல்லாதனவுமான படைப்பினங்களைப் படைத்து வைத்த பெருந்திறலோன் யார்? மிக மிக நெடுந்தூரத்திலுள்ள சூரியனைக்கொண்டு பூமிக்கு ஒளியையும் உஷ்ணத்தையும் அளிக்கின்ற ஆற்றலுடையோன் யார்? சமுத்திர சலத்தை நீராவியாகவும், நீராவியை மேகமாகவும், மேகத்தை மழையாகவும் மாற்றி, உலகத்தைப் பாதுகாக்கின்ற உத்துங்கன் யார்? இங்ஙனமே வானசாஸ்திர ஆராய்ச்சியாளரால் கண்டு பிடிக்கப்பட்டனவும், படாதனவுமான எண்ணிலடங்காத எல்லா உலகங்களையும் சிருட்டித்து அதி யொழுங்குபெற ஆண்டுவருகின்ற அதிபன் யார்? அவன்தான் "ஆண்டவன்"

மாலுமியில்லாத மரக்கலம் ஓடாது; குயவனில்லாமற் குடங்களுண்டாகா; சிருட்டிகளில்லாமற் சிருட்டிகளுண்டாகா; காரணமில்லாமல் காரியம் இல்லை. இவ்வளவையும் அறிவுள்ள அறிஞர் அட்டியின்றி அங்கீகரித்துக்கொள்ளுகின்றனர். ஆதலின் இந்தப் பெரிய பூவுலகமும், இதிலும் பெரிய சிறிய ஏனைய கிரகங்களும், அவற்றிலுள்ள அளவு கடந்த அத்தனை வஸ்துக்களும் ஒருவராற் சிருட்டிக்கப்படாமல் தாமாகவே உண்டாகிவிட முடியாதன்றோ? அக்கிரகங்கள் ஒருவராற் செலுத்தப்படாவிடின் அவை தாம் சுழலும் பாதை மாறாமற் கிரமமாய்ச் சுழன்று செல்ல முடியா தன்றோ? ஆகலின் அவற்றைச் சிருஷ்டித்து நடாத்துகின்ற "ஆண்டவன்" ஒருவன் உண்டே யுண்டென் பதில் எட்டுணையும் ஐயமின்று.

ஒரு சிலர் ஆண்டவன் இல்லை யென்றும், எல்லாம் இயற்கையாலுண்டாகின்றன வென்றும் வாதாடுகின்றார்கள். இவர்கள் தாம் நிரீஸ்வர வாதிக ளென்ற நாஸ்திகர்கள். படைப்பினங்கட்கு இயற்கை காரணமாயின் இயற்கைக்குக் காரணம் ஒன்று வேண்டாமா? இயற்கையைப் படைத்தவர் யார்? ஆண்டவனே உண்டாக்கினான். அவதார புருஷர்களான இராம கிருஷ்ணாதியோரும், புத்தரும், தீர்க்கதரிசிகளான ஆபிரகாம், மோஸே, முஹம்மது (அலை) முதலியோரும், மற்றும் பல்லாயிரக் கணக்கான பேரறிஞர்களும் " ஆண்டவன் ஒருவன் இருக்கிறான் " என்று எண்பித்துச் சென்றிருக்கும் போது இந்நாஸ்திகரின் வாதத்திற்கு என்ன மதிப்புண்டு? எனவே அன்னாரின் மொழிகளை உதறித் தள்ளவேண்டியதே.

ஹிந்து மதத்தார் கடவுளானவர் பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் என மும்மூர்த்திகளாயிருக்கிறாரெனவும், கிறிஸ்தவர்கள் பிதா, குமாரன், பரிசுத்தாவி என மூன்றாயிருக்கிறாரெனவும், முஸ்லிம்கள் இணைதுணை, ஒப்புவமையற்ற தனிமுதலான ஏகனாயிருக்கிறாரெனவும் இயம்புகிறார்கள்; எனினும் பொதுவாக அவனியிலுள்ள அத்தனை மதத்தினரும் "தெய்வம் ஒன்றுதான்" என்றே நம்புகிறார்கள். ஆகலின் கடவுள் ஒருவரே.

மனிதரை மற்றெல்லாப் பிராணிகளைக் காட்டினும் மிக மேலான விதத்திற் பராபரன் படைத்திருக்கிறான். ஏனைய பிராணிகளிடத்தில் இல்லாத "பகுத்தறிவு" என்றதை மாந்தரிடத்தில் அமைத்திருக்கிறான். இப்பகுத்தறிவைக்கொண்டு நமக்குத் துன்பந்தரும் தீயவற்றை அறிந்து அவற்றை விலக்கியும், இன்பந்தரும் நல்லவற்றை யறிந்து அவற்றைக் கைக்கொண்டும் நடந்து ஆனந்தமடைகிறோம். இங்ஙனமே நமக்கு ஆண்டவன் அளித்துள்ள உபகாரங்கள் அளவு கடந்தன.

ஆண்டவன், நாம் அவனை வணங்க வேண்டுமென்றும், வணங்கினால் இருலோகத்திலும் அவன் நமக்கு இன்பவாழ்வை யருள்வானென்றும், வணங்கா விட்டால் துன்ப வாழ்வை யளிப்பானென்றும் வேதங்களிற் கட்டளை பண்ணியுள்ளான். நமக்கு எவராவது ஒரு உபகாரத்தைச் செய்தால் நாம் நன்றி யறிதலோடு வந்தனம் செலுத்துவது நமது கடமையன்றோ? ஆதலின் ஆண்டவன் கட்டளை பண்ணினாலென்ன, பண்ணாவிட்டாலென்ன, அவன் நமக்கு உபகரித்துள்ள, உபகரித்து வருகின்ற மட்டிலடங்கா உபகாரங்களுக்காக நன்றி யறிதலுடன் மனமொழி மெய்களால் அவனை வணங்க வேண்டியது நமது முக்கிய கடமையே.

ஆண்டவனின் ஆஞ்ஞைக் கடிபணிந்து அவனை அனவரதமும் வணங்கிவந்த பல்கோடிக் கணக்கான பக்தர்கள் இருலோக பாக்கியங்களையும் பெற்றுக் கொண்டார்கள்; அவர்களை உலகம் என்றும் புகழ்ந்து கொண்டாடி வருகின்றது. அவனுடைய ஆஞ்ஞையை மதிக்காமலும், அவனை வணங்காமலு மிருந்த கொடிய பாவிகள் ஈருலகத்திலும் துரதிட்டவாளராயினார்கள்; அப்படிப்பட்டவர்களை உலகம் தூற்றுகின்றது.

ஆகலின் நல்லோர்களைப்போல நாமும் இறைவனை என்றுந்தொழுது இகத்திலும் பரத்திலும் இன்பத்தைப் பெற்றுக்கொள்ளக் கடவோம்.

சந்தாதாரர்களுக்கு.—சந்தா நெம்பர் தெரியாதவர்கள் மாதமாதம் வரும் சஞ்சிகையின்மேலுள்ள விலாசத்தில் குறிக்கப்பட்டிருக்கும் நம்பரைப் பார்த்துக் குறித்து வைத்துக்கொள்ளக் கோருகிறோம்.

# பண்டைப்புலவர் மாட்சி

T. S. குழந்தைவேல் முதலியார்.

ஆவூரை விட்டோடிய நெடுங்கிள்ளி உறையூர் சென்றிருக்க இளந்தத்த னென்னும் புலவ ரொருவர் முதலில் நலங்கிள்ளியைப் பாடிப் பரிசில் பெற்றுக்கொண்டு, அப்பால் உறையூரை யடைந்து நெடுங்கிள்ளியின்பால் சென்று அவனைப் பாடிப் பரிசில் வேண்டினன். புலவர் நலங்கிள்ளியிடமிருந்து வந்திருப்பதால், தன் இரகசியங்களை உணரவந்த ஒற்றனென்பதாக நெடுங்கிள்ளி நினைந்து புலவரைக் கொல்லக் கருதினன். இச்செய்தியை யுணர்ந்த நம்புலவர் கோவூர்கிழார் அரசனிடஞ் சென்று "அரசனே! வள்ளல்களை நாடிச்சென்று, அவர்கள் குணங்களைப்பாடி அவர்களீயும் பரிசிலாற்களித்து, அவற்றால் தாமுமுண்டு தம் சுற்றத்தாரையும் உண்பித்து, பொருளிற் பற்றின்றி கல்வியாளரோடு சொற்போர் நிகழ்த்தி வென்று அப்பெருமிதத்தோடு வாழ்வதன்றி, பிறர்க்கு இன்னல் விளைவிப்பதைப் புலவர்களறியார்" என நயம்பட வுரைத்து, அரசனது மனத்துள்ள கொடிய எண்ணத்தை அகற்றி இளந்தத்தனை உய்வித்தார். இவ்வாயிலாகப் புலவரது வாழ்க்கை நலத்தைக் கூறியிருத்தல் குறிக்கொள்ளத்தக்கது. இதைக் கொண்டும் புலவரின் தன்மையை ஒருவாறாக அளந்தறியலாமன்றோ? நெடுங்கிள்ளி புலவர் மொழிக்கு இரண்டாமுறையும் மதிப்பளித்தமையை நோக்குக. நிற்க,

நலங்கிள்ளி தன் சேனைகளுடனே உறையூருக்குச் சென்று நெடுங்கிள்ளியுடனே போர் செய்யத் தொடங்க, அதனை அறிந்த அருள் வடிவினராய புலவர் அமர்க்களஞ் சென்று, அவ்விரு சோழர்களையும் நோக்கி,

"இரும்பனை வெண்டோடு மிலைந்தோ னல்லன்
கருஞ்சினை வேம்பின் தெரியலோ னல்லன்
நின்ன கண்ணியு மார்மிடைந்தன்றே, நின்னொடு
பொருவோன் கண்ணியு மார்மிடைந் தன்றே
ஒருவீர் தோற்பினுந் தோற்பதுங் குடியே
இருவீர் வேறல் இயற்கையுமன்றே, அதனாற்
குடிப்பொரு ளன்றுநுஞ் செய்தி, கொடித்தேர்
நும்மோ ரன்ன வேந்தர்க்கு
மெய்ம்மலி யுவகை செய்யுமிவ் விகலே"

என்ற பாட்டினை அவ்வரசர்கள் மனதில் பாய்ந்து சென்று தைக்குமாறு அழகாகக் கூறி உண்மையை யுணரச்செய்து, அவர்கள் பகையை யொழித்து இருவருள்ளத்திலும் அன்புதிக்கப் பேசி ஒற்றுமைப் படுத்திய புலவர் பெருமையைப் பேசுதல் எளிதன்று. உய்த்துணர்ந்து கொள்க.

கடையெழு வள்ளல்களிலொருவனாய மலையமான் திருமுடிக்காரியின் மீதுள்ள பகைமையினால் அவன் திருக்குழந்தைகளைக் கொண்டுவந்து, சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனென்பான் கொல்லக் கருத அதை யறிந்த இரக்கமே வடிவினராய நம்புலவர் ஓடோடியுஞ் சென்று சோழனைப் பார்த்து, " அரசே! நீ ஒரு புறவுக்காகத் தன் தசையை யரிந் தீந்த சிபி யென்னும் புகழரசன் மரபிலுதித்தவனா யிருந்தும், இச்சிறார் களைக் கொலைபுரிய நினைந்தமை சரியோ?" என்னுங் கருத்துப்பட மொழி ந்து, அவனது அடாத செயலை நயமாகக் கண்டித்துக் கொலை செய்யாது தடுத்துவிட்டார். கன்னெஞ்சம் படைத்தோரும் புலவர் செம்மொழியில் சீர்பட்டு விடுகிறார்களெனில், அவர் தம் அருள் மொழிகளின் திறத்தை என்னென்பேம்?

பிறர்க்கு நேரும் இன்னல்களைத் தமதாகக்கொண்டு அவற்றைக் களை வதே தங்கடமையாய்க் கைக்கொண்டிருந்த இவர் பெற்றியினை நாம் இன் னும் பேசவேண்டுமோ?

இனி, அருங்கலை வல்ல பெருஞ் சித்திரனாரென்பாரின் ஒப்பிலாத உயர் பெருமைகளைப் பார்ப்போம். இவருங் கடைச் சங்கத்தவரே. (இரண் டாம் நூற்றாண்டு) கண்களால் கண்ட இயற்கை வனப்பினையும், மனதில் சுரந்தெழும் அருங் கருத்துக்களையும் அப்படியப்படியே கேட்போருள்ளத் தில் பதியுமாறு ஓவியக்காரன் சித்திரம் வரைந்து விளக்குவது போன்று தம் பாட்டினாலேயே ஒவ்வொரு பொருளையுந் தெளியவைக்கும் ஆற்றல் இவரிடத்துக் காணப்பட்டமையினாலேயே இவர் பெருஞ் சித்திரனாரென்னுங் காரணப் பெயரால் அழைக்கப்பட்டாரெனில், இவரது அளக்கலாகாக் கல்வி யின் அளவும் கவி பாடுதலிலுள்ள தேர்ச்சியும் இவ்வளவின வென்று எடுத் துரைத்தல் அவசியமின்று.

இவர் பரிசில் பெறக் கருதி அக்காலத்திருந்த அதியமான் நெடுமானஞ்சி யென்பானை நண்ணிப் பரிசில் வேண்டி நிற்க, அவ்வரசன் யாது காரணத் தாலோ புலவரை வரவேற்காது தம் ஏவலாளர்களைக் கொண்டு புலவருக்குப் பரிசில் வழங்கச் செய்ய, அதுகண்டு பொறாத புலவர், " அரசன் என்னைப் பாராமலே யளிக்கும் இப்பரிசிலைப் பெற நானொரு யாசகனல்லன். என் கல்வியை யறிந்து தினையளவு நல்கினும் அதையே கொள்வேன் " என்னுங் கருத்துக் கொண்ட,

"......................................
காணா தீந்த விப்பொருட் கியானோர்
வாணிகப் பரிசில னல்லேன்; பேணித்
தினையனைத் தாயினு மினிதவர்
துணையள வறிந்து நல்கினர் விடினே"

என்ற பாடலைத் தமது பெருமிதந் தோன்ற கூறிவிட்டு அவண் விட்டகன் றார். ஈண்டுப் புலவர் தகைமை எப்பெற்றியுடையதெனச் சிந்தித்தற் குரியது.

களிபுலவர் போற்றும் ஒளிதங்கிய வெளிமா னென்பானை நம்புலவர் கிட்டிய காலத்து, அவன் இறக்குந் தறுவாயிலிருந்தானாக, அப்பொழுதும் அம் மன்னன் புலவருக்குப் பெரும் பரிசிலளிக்குமாறு தம்பிக்குக் கட்டளையிட்டு மாண்டனனெனின், அக்கால வண்மையாளர்களின் தன்மையைத்தான் எடுத்தியம்பற் பாற்றோ ?

அவ்வெளிமான் தம்பியோ புலவர்கள் பெருமையினை யோராத சிற்றறிவினனாகலின், நம் புலவரிடம் ஏதோ சிறிது பொருளீய, புலவர் தம் மனைவி மக்கள் பசியால் பொடிப் பொடியாய்ச் சாகின்றார்களென்பதையும் பாராது, இளவெளிமா னளிக்கவந்த அற்பப் பொருளை மறுத்து "வெளிமான் ! புலி தன் பசிக்காக அடித்த யானை தப்பிவிடுமாயின், தன் இரைக்குப் போதாத எலியைக் கொன்று வீழ்த்தாது" என்று கூறிய புலவரின் பெருங் குணத்தையும், பெரும் போக்கையும் எங்ஙனம் புகழ்வது ?

பின்னர், முதிரமலைத் தலைவனாகிய குமணன்பாற் சென்று அவன் வள்ளன்மையைப் பல தீஞ்சுவைப் பாக்களாற் புகழ்ந்து, அவனிடம் களிறும் பொன்னும் பட்டாடைகளும் பெற்றுத் தம்மூருக்குத் திரும்புங்கால், தம்மை மதியாத இளவெளிமான் ஊர்முகமாகச் சென்று அவனது *காவல் மரத்தில் தமது களிற்றைக் கட்டிவிட்டு, அரசனிடஞ் சென்று,

"இரவலர் புரவலை நீயு மல்லை
புரவலர் இரவலர்க் கில்லையு மல்லர்
இரவல ருண்மையுங் காணினி இரவலர்க்
கீவோ ருண்மையுங் காணினி நின்னூர்க்
கடிமரம் வருந்தத் தந்தியாம் பிணித்த
நெடுநல் யானையெம் பரிசில்
கடுமான் றோன்றல் செல்வல் யானே"

என்ற பாடலால் தம் பெருமையினை அரசனகத்திற் பதியுமாறியம்பிய புலவர் மனோதிடத்தையும், அறியா மன்னனுக்கு அறிவுறுத்த வெண்ணிய அவர் தம் போக்கினையும் உன்னியுணர்க.

பழங்காலப் புலவர்கள் கேவலம் வயிறு வளர்த்தற் பொருட்டே அரசர்களை யணுகி வெறும் பாட்டுக்களைப் பாடிய கோழைகளாயிராமல், வீரம்,

---

* காவல் மரமென்பது பழங்கால மன்னர்கள் தங்கள் வெற்றிக் கறிகுறியாக ஒவ்வோர் வகை மரத்தைத் தமதூர்ப்புறத்துச் சோலையில் வைத்து அதைக் கண்போல் காப்பார்கள். அம்மரத்தைப் பகை வேந்தர்கள் அழித்து விடுவார்களாயின், மரத்துக் குரிய மன்னர் பெருந்தோல்வி எய்தியதாகக் கருதப்படுவர். இத்தகைய இளவெளிமானின் காவல் மரத்தில் தம் யானையைக் கட்டிய சித்திரனாரது அஞ்சா நெஞ்சத்தை என்னென்றுரைப்பது ?

கல்வி, அருள் நிரம்பிய உள்ளத்தினராய்த் திகழ்ந்தனரென்பதற்கு நஞ் சித்திரனாரை ஒரு காட்டாகக் காட்டலாம்.

இன்னுமிவர், கார்தோற்றுப் போகக் கொடுக்கும் கரத்தோனாகிய குமணவள்ளல் ஈந்த பொற்பரிசிலைத் தாமும் தம் மனைவி மக்களுமே யனுபவிக்க நினையாது, தம் மனைவியை யணுகி,

"நின்னயந் துறைநர்க்கும் நீநயந் துறைநர்க்கும்
மன்மாண் கற்பினின் கிளைமுத லோர்க்கும்
கடும்பின் கடும்பசி தீர யாழநின்
நெடுங்குறி யெதிர்ப்பை நல்கி யோர்க்கும்
இன்னோர்க் கென்னா தென்னொடுஞ் சூழாது
வல்லாங்கு வாழ்து மென்னாது நீயும்
எல்லோர்க்குங் கொடுமதி மனைகிழ வோயே
பழந்தூங்கு முதிரத்துக் கிழவன்
திருந்துவேற் குமணன் நல்கிய வளனே"

என்ற பாடலால் தன் உள்ளக் கிடக்கையை வெள்ளையாய்க் காட்டிய புலவர் தம் உத்தம சிந்தைதானென்னே! இது சாலவும் வியந்து போற்றும் பெற்றியுடைத்தன்றோ?

குமண வள்ளலைப் புகழ்ந்தும், தம் வறுமை நிலைமையினைத் தெளிவு படுத்தியும் பாடுங்காலை "மோசி பாடிய ஆயும்" (புறம்-158) என்று சுட்டியிருத்தலால், இவர் ஏனைய புலவர்களை மதித்துப் போற்றும் மாண்புடையாரெனவும், பிறர் கல்விப் பெருக்கினைக் கண்டு பொறாமை கொள்ளும் புல்லறிவாளரின் அற்பகுண மணுகப்பெறாதவரெனவுங் கொள்ளக்கிடக்கிறது.

பெருஞ் சித்திரனாரின் பெருமைகளை எழுதிவிளக்குதல் சாத்தியமன்று. மனத்தின் உணர்ச்சியானே உணர்வதே சிறப்புடைத்து. அவரை வீரந்ததும்பிய உள்ளத்தினர், அன்பு நிறைந்த மனத்தினர், அருள் வழியும் முகத்தினரென்று கூறி முடித்தலே தகும்.

அப்பால், ஆசில்புகழ் பிசிராந்தையா ரென்னும் புலவர் பெருமானின் பெருமைகளைக் காண்போம். கல்வியுங் குணமும் ஒருங்கே வாய்க்கப் பெற்ற இவர் இரண்டாம் நூற்றாண்டின் இடைப் பகுதியிற் றிகழ்ந்தவராவர். கல்விக் கடலைக் கரைகண்டவர். நட்புக்கோர் நாயகமாய் விளங்கி அதன் முகத்தானே மன்னு இவ்வுலகில் மன்னுதல் குறித்துத் தம் புகழ் நிறீஇத் தாமாய்ந்தவர்.

இவர் உறையூரை யாண்ட கோப்பெருஞ் சோழனிடம் விள்ளா நட்புக் கொண்டு அவனன்பை அள்ளியள்ளிப் பருகியவர். சோழனும் புலவரும் மனமொத்த நட்பினர். ஒருகால் சோழன் அரசபோகத்தை வெறுத்துத் தனியே ஓரிடத்திலிருந்தபோது வெளியூரிலிருந்த புலவர் வாராமையால், பலர் அன்புடைய புலவர் அரசன் ஏழைமையுற்ற சமயம் வாராதிருப்பது நன்றோ? என்று ஒருவாறு இகழ்ந்துரைக்க இதைச் செவியுற்ற மன்னன் மனம்

பொழுது 'புலவர் அச்சமையோரல்லர். என் செய்தி உணர்வராயின் உடன் வருவார்' என்று சமாதானங் கூறினன். ஆ! இங்ஙனங் கூறிய அரசனுக்குப் புலவரிடம் எத்துணை மதிப்பிருக்க வேண்டும்? எவ்வளவு ஆழமாக அவர் மனதை அறிந்திருக்க வேண்டும்?

அரசன் கூறியாங்கு புலவரும் சில தினத்தில் வந்துசேர இருவருங் கூடி மகிழ்ந்தனர். பின்னர் அரசன் தர்ப்பாசனத்தின்கண் வீற்றிருந்து உண்ணாவிரதம் அனுஷ்டித்து இந்திரியங்களை யடக்கி உயிரைவிட, புலவரும் அங்ஙனமே தம்முயிரையும் நீத்துத் தம் நட்பின் சிறத்தை உலகினர்க்கு மலையின் விளக்கென விளக்கினர். இதனினும் புலவரின் பெருமைக் குணத்திற்கு எடுத்துக்காட்டு எதற்கு?

மேற்கூறிய கோப்பெருஞ் சோழனிடம் அன்பு பூண்டிருந்த செந்நாப் புலவராம் பொத்தியா ரென்பாரும் அரசனிறந்தமைக்காற்றாது தாமும் மடிந்தார். இவர் அரசனிடங் கொண்டிருந்த அன்பு தானென்னே! அருங் குண அருஞ்செயல் தானென்னே!

இன்னும் புலவர்களின் பெருமைகளை ஆராயப்புகின் வரைதுறை யின்றி வளர்ந்து செல்லும். நுணுகி நோக்குவாருக்குப் புலவர்களிடத் துள்ள இன்னும் எத்தனையோ அரும் பெருங் குணங்களும், செயல்களுந் தோன்றும். அக்காலப் புலவர்களை எத்துணைச் சிறப்பித்துக் கூறினும் பொருந்தும். அத்தனைக்கும் இலக்காகவர்களாய் அவர்கள் இலங்கினர். அதற்கு அரசர்களுடையவும் வள்ளல்களுடையவுமான ஆதரவுகள் பெரிது மிருந்து, அதனால் தண்டமிழ்க் கல்வியின் இன்சுவையைப் பருகிக் களித்துத் தீஞ்சுவைப்பாக்கள் பலயாத்துத் தங்கள் பொய்யுடலை நீத்துப் புகழுடம்பைத் தாங்கி இன்றும் நாம் போற்றும் நிலைபெற்று நிற்பாராயினர் அவர்களைப் போலவே நாமும் பெரும் புலவராய் ஆகாவிடினும் அவர்களால் நமக்குப் பெருந்தனமாய்ச் சேமித்து வைக்கப்பட்டுள்ள சுவைசெழுமிய செந்தமிழ்ப் பாக்களை யேனும் ஆராய்ந்து பொருள் நுட்பங்களை யுணர்ந்து மகிழுவொண்ணாதா? சுபம்.

# கணிதநூலும் நமது நாடும்

(M. P. சந்திரப் பிரகாசம்.)

பரந்த வெளியையுடைய இப்பரத கண்டமானது கல்வி, செல்வம், மதம், ஆசாரம், தொழில், இராஜரீகம் முதலிய பல விஷயங்களில் மேம்பாடடைந் திருந்ததென்றும் பிற நாட்டை எத்துணையும் எதிர் நோக்காது செவ்வனே செழித்தோங்கி யிருந்ததென்றும் மற்றைய நாட்டோர் இந்நாட்டின் உதவியையே எதிர் நோக்கி வந்தனரென்றும் சரித்திரங்களினாலும், மூன்னூற்களினாலும், பத்திரிகைகளினாலும், அறிந்திருக்கின்றோம். ஆனால் இக் காலத்திலோ எல்லா விஷயங்களிலும் தாழ்மையடைந்து அன்னியரை எதிர் நோக்கிய வண்ணமாயிருக்க நேரிட்டது. இவ்வாறானதற்குக் காரணமென்னை யெனில்? நாம் நமது முன்னோர்களின் முறைகளை அறவே விடுத்து, நூதன முறைகளை அயல்நாட்டின் நடை, உடை, பாவனை, பாஷை முதலானவைகளைப் பின்பற்றியதே யாகும். இங்கு நமது பழந்தமிழ்க் கணித ஆராய்ச்சியைப் பற்றிச் சிறிது ஆலோசிப்பாம்,

எண்ணென்ப வேனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழு முயிர்க்கு

எனத் தெய்வப் புலவரும்,

'எண்ணு மெழுத்துங் கண்ணெனத் தகும்' என்று ஔவையாரும் அருளிய நீதிகளில் எண் முதற்கண்ணாகவும், எழுத்து இரண்டாவதாகவும் கூறியது கவனிக்கத்தக்க விஷயமாகும்.

கல்வி யறிவில்லாதவர்களுக்கும் கணித அறிவு இருப்பதைப் பலரும் நன்குணர்ந்திருத்தல் கூடும். எழுத்து என்பதையே அறியாத எத்தனையோ மனிதர்கள் பல வியாபாரங்களைச் செய்து சிறிதும் தவறாது விலை கொடுத்து வாங்கியும் விற்றும் வருகின்றனர். ஆனால் இன்னோர் உணர்ந்திருக்கும் கணித வாய்ப்பாடம் யாதெனில் நமது முன்னோர் மிக்க பிரயாசையுடன் தேடி வைத்த தமிழ் எண்சுவடியிலுள்ள வாய்ப்பாடமே யாகும்.

இவ்வரிய தமிழ் எண்ணால் அறிந்தோர் பெரிய தொகையாயினும் மிகச் சிறிய தொகையாயினும் துணைக்கருவியின்றியே மொழிகின்றனர்.

தமிழ் எண்கள், இலக்கம், நெல்லிலக்கம் என இருவகைப்படும். இலக்கம் குறைந்த எண்ணாகிய முந்திரி என்று ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. இத்தனை சிறிய தொகையையும் ஒரு பெயராலும் தனிப்பட்ட ஓர் எழுத்தாலும் குறிப்பிடுவது மிகவும் பாராட்டத்தக்கதாகும். இவ்வாறு ஆரம்பிக்கப்பட்ட நந்தமிழ் எண் இலக்கமானது படிப்படியாய் உயர்ந்து 10 வரையில் தனிப்பட்ட குறிப்புகளுடனும் பின் பத்துப்பத்தாக மூந்திய எண்களைத்

தழுவியும் நூறு, ஆயிரம், தனிக் குறிப்புள்ளதாகவும் மேல் மொழிக்குறிப்புள்ளதாகவும் அமைந்துள்ளன.

இரண்டாவதாகிய நெல் இலக்கம் தானிய அளவைக் குறிப்பது. தற்போது வழங்கும் முகத்தலளவையில் ஆழாக்கிற்குக் குறைந்த அளவேயில்லை. முற்காலத்திலோ ஆழாக்கை 5 பாகமாக்கி ஒரு பாகத்திற்கு சோடு எனப் பெயர் கொடுக்கப்பட்டு தனிப்பட்ட குறிப்புகளுடன் கலம் வரையில் முடிந்திருக்கின்றது.

இனி இவ்வெண் பெருக்குத் தொகையைப் பற்றிக் கவனிப்பாம். இது மேற்கூறிய முந்திரி முதலாகிய தனி எண்களை ஒன்று, பத்து, நூறு ஆகியவற்றால் முறையே பெருக்கப்பட்டு ஆயிரத்தில் முடிவதாக இருக்கின்றது. அன்றியும் ஒன்றுக்குக் குறைந்த பின்ன இலக்கங்களாலும் பெருக்கப்பட்டும் கீழ் எண்களாகப் பகுக்கப்பட்டும் நெல்லிலக்கத்திலும் அப்படியே நெல்லாகவுங் கூடப் பிரித்திருப்பது நோக்க பண்டைத் தமிழ் கணித ஆராய்ச்சியின் அற்புதம் புலனாகும். தவிர பரப்பளவையும் மறந்துவிடவில்லை. சதுரம் எனவும், குழிமாறல் எனவும் எற்படுத்தியுள்ளது மிகவும் கவனிக்கத்தக்கதாகும்.

எனவே, எண்சுவடியை யாவர் சந்தேகமற—பூர்த்தியாக—மனனம் பண்ணியுள்ளாரோ, அவர் எல்லாவிதமான கணக்கையும் இலகுவில் செய்யச் சக்தி வாய்ந்தவராவர். இவ்வருமை நோக்கியே முற்காலப் பாடசாலைகளில் மாணவர்களுக்கு எண்சுவடி ஆரம்பிக்கும் தினம் எண்சுவடி துவக்குதல் என்னும் முக்கிய தினமாக—சிறந்த நாளாகக் கருதப்பட்டு வந்திருக்கின்றது. இத்துணைச் சிறப்பாய்க் கருதிய நம் பழைய எண்சுவடிக் காலம் மறைந்தே போய்விட்டதெனலாம்.

“பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல காலவகையினானே” என்றபடி முற்காலத்தில் இவ்வெண்களுக்கியைந்த நாணயங்களும் அளவைகளும் இருந்திருக்கக் கூடும். இப்போது அவை இல்லையே என் வீணாகப் பிரயாசையுடன் பாடம் பண்ணவேண்டும் என ஓர் வினா பிறக்கலாம். எனினும் தற்கால வழக்கத்திற்கு ஒட்டிய அளவைகள் இல்லாமலில்லை. ஒன்றிரண்டு உபயோகத்திற்காகாவிடினும் பல சமயங்களில் மிகவும் அருமையாகப் பயன்படுகின்றது.

நம் தமிழ் மக்கள் நெடுங்கணக்கிலுள்ள எழுத்துக்களைப் படித்து முடிந்த உடனேயே—அதாவது பாடசாலையை அடைந்த சில மாதங்களிலேயே எண்சுவடியை ஆரம்பித்து முடித்துக் கொண்டமையால் அதற்குமேல் உபாத்தியாயருக்குச் சம்பளங் கொடுத்து வாசிக்க இயலாத பலர் இப்படிப்புடனே நின்று விட்டனர் எனினும், இன்னோர் எழுதப் படிக்க அறியாரேயாயினும் கணக்கிட வல்லோராகின்றனர்.

இன்னும் இதன் அருமை பெருமைகளை விரிக்கிற் பெருகும். ஆதலால் நமது வாழ்விற்கு, ஜீவனத்திற்கு, உலக அனுபவத்திற்கு மிகவும் சாதனமாம் தமிழ் எண்சுவடியை ஆரம்பப் பாடசாலைகளில் ஒரு முக்கிய பாடமாக நடத்துதல் பெரிதும் பயன் தரத்தக்கதும் அவசியமானதுமாகும் என்பது எனது சித்தாந்தம்.

---

# புஷ்பராகத் தோடு

(பண்டித - லி. ராமசாமி.)

(309-ம் பக்கத் தொடர்ச்சி)

அன்றைக்கு நான் எப்போதும் போல் கோர்ட்டுக்குப் போய்க்கொண்டிருந்தேன். என் எதிரே தபாற் சேவகன் வந்தான். எனக்கு ஏதாவது தபால் உண்டா என்று கேட்டேன். அதன் பிறகு அவன் ஒரு சிறு பார்சல் (இன்ஷியூர் செய்தது) காட்டினான். அதில் என் மனைவியின் மேல் விலாசம் இருந்தது. அந்தப் பார்சல் அவளுடைய அண்ணா அனுப்பியது. அதில் என்ன இருக்கிறது என்பது எனக்குத் தெரியும். வீட்டில் கொடுக்கும்படி சேவகனிடம் சொல்லிவிட்டு என் வழியை நான் தொடர்ந்தேன். ஆனால் என் மனதுக்குள்ளே ஒருவிதமான மாறுதல் உண்டாகத் தொடங்கிற்று. இந்தப் பார்சல் என் பேருக்கு வராமல் அவள் பேருக்கு வந்தது—இதுதான் என் மனதில் உண்டான விகாரத்துக்குக் காரணம். அவளுடைய உறவினரும், அண்ணன், தம்பி முதலானவர்களும் அவள் பேருக்குச் சாதாரணமாகக் கடிதங்கள் எழுதுவது உண்டு. என் பேருக்கு ஏதோ ஒவ்வொரு சமயம்தான் எழுதுவார்கள். கடிதம் எழுதுவதாவது, வந்த கடிதங்களுக்குப் பதில் எழுதுவதாவது எனக்கு மகா தொல்லையான வியாபாரம். இதனால் என்னுடைய உறவினர்களுக்குங்கூட அவளே சாதாரணமாகக் கடிதம் எழுதுவது வழக்கம். அப்படியிருந்தாலும் அந்தப் பார்சல் என் பேருக்கு வரவில்லையே என்ற கோபம்—பிரமாதமான கோபம் அல்ல—கிஞ்சித் கோபம் எனக்கு உண்டாயிற்று! இந்தக் கோபத்தோடும் மனக் கஷ்டத்தோடும் நான் கோர்ட்டில் என்ன என்ன செய்தேனோ எனக்கு ஞாபகம் இல்லை. ஆனால் ஏதேனும் பெரிய குற்றங்கள் செய்துவிட்டேன் என்று நினைத்து விடாதீர்கள். அப்படி ஒன்றும் இல்லை. வழக்கம்போல் வரும் நேரத்துக்கே வீட்டுக்கு வந்தேன். வழியில் வரும்போதே பார்சல் சங்கதியைப்பற்றி அவளைக் கேட்கக் கூடாது என்று எனக்குள்ளே தீர்மானித்துக் கொண்டேன். இவ்வளவுதான் உண்மை.

வீட்டுக்கு வந்தேன். கை, கால், முகம் சுத்தி செய்துகொண்டு பலகாரம் சாப்பிட்டு "டீ" குடித்தேன். பிறகு வெற்றிலை பாக்கு மென்றுகொண்டே "ஸிஸெர்ஸ்" ஒன்று பற்றவைத்துக்கொண்டு சமீபத்தில் வந்த "ஆனந்தபோதினி"யைப் புரட்டிப் பார்த்துக்கொண்டு "ஈஸிச்சே"ரில் சாய்ந்தவாக்கில் அத்தானோடு பேசிக்கொண்டிருந்தேன். அப்போது என் தமக்கை மகன் பாலன் குதூகலத்தோடு கையிலிருந்த பத்திரிகையைப் பிடுங்கி பொம்மை பார்க்கத் தாவிக்கொண்டிருக்கிறான். இந்த விதமாகச் சாயங்காலம் கழிந்தது. இரவில் எப்போதும் போல் சாப்பாடு முடிந்தது. அந்த இரவுமுழுதும் மாமூல் முறையில் கடந்துவிட்டது. ஒன்றும் விசேஷம் இல்லை. நான் பார்சல் சங்கதியை அவளைக் கேட்கவும் இல்லை, அவள் தன் சமாசாரத்தை என்னிடம் சொல்லவும் இல்லை.

பொழுது விடிந்தது. என் மனைவி எப்போது தூக்கத்திலிருந்து எழுந்தாளோ எனக்குத் தெரியாது. ஆறுமணி அடிக்கும்போது வந்து என்னை எழுப்பினாள். வீட்டு வேலைச் சந்தடி பலமாக இருந்தது. 'எண்ணெய் காய்ச்சி வைத்திருக்கிறது, தேய்த்துக்கொள்ள வாருங்கள்'' என்றாள் என்னை. ''ஆஹா அப்படியே'' என்று நானும் காலைக்கடனை முடித்துக்கொண்டு எண்ணெய் ஸ்நானம் செய்தேன். கூடத்தில் எனக்கும் என் அத்தானுக்குமாக இரண்டு ஆசனங்கள் போடப்பட்டிருந்தன. இரண்டு பேரும் சேர்ந்து உட்கார்ந்தோம். முதலில் இட்லிகளைக் கொண்டுவந்து வைத்தார்கள். நாங்களும் சாப்பிடத் தொடங்கினோம். அதற்குள் என் வீட்டுக்காரியும் நாடகமேடையில் 'அயன் ஸ்திரீபார்ட்'' கதாநாயகியைப் போல் சிங்காரித்துக்கொண்டு, குலுக்கிப் பிலுக்கி கர்வமாக அன்னநடையில் வந்தாள். வந்துகொண்டிருக்கும்போதே என் கண்களில் முதல் முதலில் விழுந்தது அவள் காதில் பளீர் பளீர் என்று டால் அடித்துக்கொண்டிருந்த ''புஷ்பராகத்தோடு.'' நேற்றுத் தபால் சேவகன் கொண்டுவந்து கொடுத்த பார்சலில் இருந்தது இதே; அவளுடைய அண்ணன் அவளுக்கு தீபாவளிக்கு என்று அனுப்பியது. அது என் கண்களில் விழுந்தது. நானும்—அவள் நேற்றையிலிருந்து என்னோடு சொல்லாத காரணத்தால்—பார்த்தும் பார்க்காமலே இருந்துவிட்டேன். என்னுடைய ''கப்''பில் காபி போடுவதற்காக என் மனைவி குனிந்தாள். புஷ்பராகத்தோட்டை எனக்குக் காட்ட வேண்டும் என்ற நோக்கந்தான் போலும்—காபியை ஊற்றிவிட்டு நிமிரும்போது கன்னத்தின்மீது என்னமோ இருந்ததுபோல் துடைத்துக் கொண்டே புறப்பட்டாள். அந்தத் தொந்தரவில—தடுமாற்றத்தில் கையிலிருந்த காபி கூஜா நழுவி என் ''கப்''பின் மேல் விழுந்து கீழே கவிழ்ந்து போய்விட்டது. எனக்குச் சிரிப்பு வந்தது. என் வீட்டுக்காரிக்கு வெட்கம் வந்தது. பாவம்! முகம் எப்படி எப்படியோ ஆகிவிட்டது. தேனீயைப் போல் ''விர்'' என்று உள்ளே ஓடிப்போய் விட்டாள். அரைமணி நேரம் நாங்கள் காபிக்காகக் காத்திருக்கவேண்டி வந்தது. என்னுடைய அத்தான் ''அகஸ்மாத்தாய்க் கைதவறிவிட்டது'' என்றார். உண்மையான காரணம் யாருக்குத் தெரியும்? எனக்குத் தெரியும்—அவளுக்குத் தெரியும். ஆனால், நாங்கள் இரண்டுபேரும்—இரண்டுபேர் எங்கே?—நான் மாத்திரம்—என் வீட்டுக்காரிதான் உள்ளே ஓடிப்போய் விட்டாளே!—ஒன்றும் பேசவில்லை. எதனாலோ அப்போது எனக்குக் கோபம் கொஞ்சமேனும் வரவில்லை. மற்றொரு சமயம் இந்த மாதிரி நழுவி யிருந்தால் எப்படியிருந்திருக்குமோ. இப்போது இது கைப்பிசகு அல்ல ''தோட்டின்'' பிரபாவம் என்று எண்ணிக்கொண்டேன், சிரித்துக்கொண்டேன். சும்மா இருந்தேன்! அதன் பிறகு நான் பத்திரிகை படிப்பதிலும், நண்பர்களைப் பார்ப்பதிலும் பொழுது போக்கினேன். பகல் சாப்பாட்டு வேளை. இதற்குள்ளாக அவள் என் முன்னால் நாலைந்து தடவை வந்தாள். ஆனால் நான் ஏறெடுத்துக்கூடப் பார்க்கவில்லை, அவளும் ஏதோ வீட்டுவேலை தடபுடலில் இருந்துவிட்டாள்.

மணி பன்னிரண்டு அடித்தது. அத்தான்—நான்—எங்கள் மத்தியில் பாலன் சாப்பாட்டுக்கு ஆசனங்களில் உட்கார்ந்திருக்கிறோம்.

என்னென்னமோ ஊர்ப் பேச்சுகளோடு சாப்பாடு நடக்கிறது. இடையிடையே பாலனைச் சிரிப்புக் காட்டிக்கொண்டும், அவனுடைய செல்ல—

மழலைப் பேச்சுகளுக்கு நாங்கள் சிரித்துக்கொண்டும் இருந்தோம். என் மனைவி பரிமாறிக்கொண்டிருக்கிறாள். தமக்கை வடை சுட்டுக்கொண் டிருக்கிறாள். என் மனைவி சேமியா பாயசம் கொண்டுவந்து அத்தானுக்குப் பரிமாறினாள். பாலன் இலையிலும் ஊற்றினாள். என் இலைக்குப் பக்கமும் வந்தாள். அதற்குள் என்ன நினைத்துக்கொண்டாளோ—இருந்தாற்போ லிருந்து தலையை ஒரு தினுசாக வீசினாள். அந்த வீச்சில் கையிலிருந்த கிண் ணம் நழுவிற்று—என்னுடைய இலையில் விழுந்து குப்புறக் கவிழ்ந்தது! மனைவி என் முகத்தைப் பார்த்தாள். நான் அவள் முகத்தைப் பார்த்தேன். அத்தானும் பாலனும் அங்கேயே பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். என்ன செய்வது? ஒருபக்கம் எனக்குச் சிரிப்பு வந்துகொண்டிருக்கிறது. இன்னொரு பக்கம் கோபம்! ஏதாவது சொல்லுவதற்கும் தோன்றவில்லை. எப்படி யிருந் தால் என்ன? "என்னடி அது! இப்படியா பலங்குறைந்து போவது? காலை யில் "காபி" கூஜா, இப்பொழுது பாயசக் கிண்ணம்! எல்லாம் நானே குடிக்கவேண்டும் என்று உனக்கு ஆசையாயிருந்தால் ஒரே தடவையில் ஒரு பெரிய கிண்ணத்தில் கொண்டுவந்து என் முன்னால் வைத்துவிடக்கூடாதா? இந்தச் சிறு கிண்ணத்தில் கொண்டுவந்து என் இலையில் கவிழ்த்து விடுவதில் என்ன பிரயோஜனம்? இந்த மாதிரி இடக்குப் பண்ணுவது என்னமோ நல்லா இல்லை. இப்படிச் செய்வதற்குக் காரணம் என்ன சொல்லு பார்ப் போம்!" என்று மாத்திரம் பேசினேன்.

"மாமா! மாமா!! அத்தையம்மா பாயசம் எல்லாம் உனக்கே ஊற்றி விட்டது. எனக்கு முந்திரிப் பருப்பு, திராட்சைப் பழம் போடவே இல்லை. நான் முந்திரிப் பருப்புக் கண்டதில்லையோ? அத்தையம்மாளுக்குப் பேய் பிடித்திருக்கிறது!" என்றான் பாலன். இதற்கு எல்லாரும் சிரித்தோம். என் மனைவி முகத்தை "பும்" என்று வைத்துக்கொண்டு புறப்பட்டுப் போய் விட்டாள். பிறகு என் தமக்கை வந்து பரிமாறுதலைப் பூர்த்தி செய்தாள். என் மனைவி எங்கள் எதிரில் வரவேயில்லை.

இந்த நேரம் சாப்பாடு பலமா யிருந்ததினாலும், நேரம் சிறிது மீறிச் சாப்பிட்டதினாலும் கொஞ்சம் ஆயாசம் தீர்த்துக்கொள்ளலாம் என்று நினைத்து நான் எனது அறைக்கும், அத்தான் தனது அறைக்குமாகப் போனோம். நான் பகலில் தூங்கும் வழக்கம் இல்லை. என்றாலும் சிறிது நேரம் சும்மாவாவது படுத்துப் புரளவேண்டும் என்று தோன்றியது. பாலன் தட்டில் வெற்றிலைப்பாக்குக் கொண்டுவந்து கொடுத்தான். தாம்பூலம் தரித்து "வில்ஸெர்ஸ்" ஒன்று பொருத்திக்கொண்டு நான் எனது கட்டிலில் படுத்திருந்தேன். கொஞ்ச நேரம் சென்றதும் எப்படி வந்ததோ தெரிய வில்லை—எனக்கு உறக்கம் வந்துவிட்டது. சுமார் இரண்டு மணி நேரம் தூங்கியிருப்பேன்போ லிருக்கிறது. கண் விழித்துப் பார்க்கும்போது என் னுடைய காதலி அறையிலிருந்த நிலைக் கண்ணாடிக்கு முன்னால் நாற்காலி யில் உட்கார்ந்து கண்ணாடியில் தன்னைப் பார்த்துக்கொண்டிருக்கிறாள். சடை கிடை எல்லாம் தயாராகிவிட்டது. கொரநாட்டுச் சேலை—கிளிகலர் பட்டுக் கட்டியிருக்கிறாள். பெங்களூர் பட்டு ஜரிகைக் கரை ரவிக்கை போட் டிருக்கிறாள். வீட்டில் பெட்டியில் இருந்த நகைகள் நான்கையும் எடுத்துப் பூட்டிக்கொண்டிருக்கிறாள். காதில் போட்டிருந்த புதிய புஷ்பராகத் தோட்டைக் கழற்றினாள். பார்த்தாள். "பாலிஷ் லெதரினால்" துடைத்

தான். கைக் குட்டையால் காதுகளைத் துடைத்துக்கொண்டாள். தோட்டை மறுபடியும் காதுகளில் போட்டுக்கொண்டாள். பின்னுக்குத் திரும்பிப் பார்த்தாள்! நான் இதுவரை எல்லாம் பார்த்துக்கொண்டே இருக்கிறேன். பின்னால் திரும்பிப் பார்த்தபோது நான் கண்களை மூடிக்கொண்டேன்! நான் பார்க்கவில்லை என்று இருந்தாளோ என்னவோ! ஆமாம்! நான் பார்க்கவில்லை என்றுதான் இருக்கிறாள்.

மெல்ல எழுந்தாள். என் சமீபம் வந்தாள். தோளைத் தட்டிக்கொண்டே "இந்த நேரம் "டீ" தேவையில்லைப்போலிருக்கிறது? நாலரை மணியாகிவிட்டது" என்றாள். நான் துள்ளி விழுந்து எழுந்தேன், அவளைப் பார்த்துச் சிரித்தேன். அவளும் மேல் உபசாரத்துக்கு மேலோட்டாக மந்தஹாஸம் புரிந்தாள். "டீ எங்கே?" என்றேன். "கொண்டு வரட்டுமா?" என்று நிலத்தைப் பார்த்துக்கொண்டு நின்றாள். நானும் "உம்" என்றேன் சிரித்துக்கொண்டே.

அவள் பின்னுக்குத் திரும்பிப் புறப்பட்டுப் போனாள். அவள் நடந்த அந்த நடையில் ஏமாற்றம்—ஆசாபங்கம், அதிருப்தி, மகிழ்ச்சிக் குறைவு முதலியவை நிறைந்திருந்ததாக எனக்குத் தெரிந்தது! அவள் போன பிறகு "இப்போதாவது என்னிடம் சொல்லாமல் இருந்து விட்டாள் அல்லவா?" என்று எண்ணிக் கொண்டேன்.

இதற்குள் அவள் ஒரு தட்டில் நாலைந்து வடை, முறுக்கு, எள்ளுருண்டைகளை வைத்துக்கொண்டு வந்து என் முன்னால் வைத்தாள். நான் "அத்தான் பலகாரம் சாப்பிட்டாரா?" என்று கேட்டேன்.

"ஆமாம்! சாப்பிட்டார். சாப்பிட்டுவிட்டு எங்கேயோ வெளியில் போனார்"

"என்ன? என்னை விட்டு விட்டா? என்னை உறக்கத்தினின்றும் எழுப்பி விடாமல் போய் விட்டாயே?"

எனக்குத் தோன்றவில்லை. எப்பவும் இல்லாத வழக்கம் இந்த நேரம் இருக்கும் என்று யாரும் என்னிடம் சொல்லவில்லை. இருந்தாலும் தூங்கிக்கொண்டிருக்கும் போது எழுப்பலாம் என்று இரண்டு மூன்றுதரம் வந்தேன், ஆனால் எழுப்ப மனம் வரவில்லை.

"ஏன்?"

"ஏனோ—என்ன கோபம் வருமோ. அநேக வேலைத் தொந்தரவுகளில் இருக்கிறீர்கள் அல்லவா? நான் நடுவில் குறுக்கே வந்து விட்டேன் என்று—"

"யார்?—நானோ?"

"உம்"

"என்ன வேலைத் தொந்தரவுகளில் இருக்கிறேன்?"

"கும்ப கர்ணனுக்குப் பதில்—"

எனக்குச் சிரிப்பு வந்தது. இதுவரை அவள் பேசிக்கொண்டேதான் இருக்கிறாள்; ஆனால் முகத்தில் இயற்கையாக இருக்கவேண்டிய களையும் ஒளியும் இல்லை. என்னமோ, என்னால் விவரிக்க முடியவில்லையே யொழிய, எங்கேயோ ஏதோ குறை இருப்பதாக மாத்திரம் நன்கு விளங்கியது.

"கும்பகர்ணனுக்கு பதில்—" என்று அவள் என்னமோ சொல்லிக் கொண்டிருக்கும்போது எனக்குச் சிரிப்பு வந்தது. அவளுக்கும் சிரிப்பு வந்தது. நான் கட்டிலிலிருந்து சரேலென்று எழுந்தேன். அதற்குள் எங்கள் பாலன் அறைக்குள் ஓட்டமாக ஓடிவந்து "மாமா! என்னை வேடிக்கை பார்க்கக் கூட்டிக்கொண்டு போகமாட்டாயா? ஐபா என்னைவிட்டு விட்டுச் சொல்லாமல்போய்விட்டார்" என்று தாவிக் கட்டிப் பிடித்துக்கொண்டான். "போகலாம்! போகலாம்!! "டீ" குடித்துவிட்டுப் போகலாம்" என்றேன். நானும் அவனும் பலகாரத் தட்டைக் காலியாக்கிவிட்டு, "டீ" குடித்து, ட்ரஸ் (கதர்) செய்து கொண்டு, ஸ்வாமி ஊர்வலமாக எழுந்தருளும் காட்சியைக் காணச் சென்றோம்.

நாங்கள் வீட்டுக்குத் திரும்பும்போது விளக்குகளை ஏற்றுகிறார்கள். பாலன் பஜாரில் வாங்கின கிலுகிலுப்பை, விளையாட்டு மோட்டார் வண்டி முதலியவைகளைக் கொண்டுவந்து தன் தாயாருக்கும் அத்தைக்கும் காட்டி ஆர்ப்பாட்டம் செய்துகொண்டிருக்கிறான். அத்தான் புஷ்பப் பொட்லத்தைக் கையில் எடுத்துக் கொண்டு வீட்டுக்கு வந்தார். கொஞ்சநேரம் நாங்கள் ஊர்வலச் சிறப்பைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தோம். இதற்குள் சாப்பாட்டுக்கு அழைப்பு வந்தது.

இந்தநேரம் சமையல் வேலை, பரிமாறுதல் எல்லாம் என் தமக்கையுடையதே. என் மனைவி நெய், நல்ல தண்ணீர், தயிர் முதலான சில்லறைப் பதார்த்தங்களைப் பரிமாறுகிற அளவில் இருந்தாள். இரண்டாந்தரம் நெய்விட நெய்க் கிண்ணத்தைக் கையால் பிடித்துக்கொண்டு எங்கள் எதிரிலேயே நின்றுகொண்டிருந்தாள். நான் அப்பப்போது அவள் பக்கம் திரும்பிப் பார்த்துக்கொண்டிருந்தேன். நான் பார்க்கும்போதெல்லாம் அவள் கண்கள் நிலத்தைப் பார்க்கத் தொடங்கி விடும்.

நான் காலையிலிருந்து செய்துவரும் "டக்கல்க"ளால் என் காதலிக்குக் கஷ்டம் உண்டாயிருக்காதா? நான் தோடுகளைப் பார்த்தும் பார்க்காமலேதான் இருந்து வருகின்றேன்! அவள் எனக்குக் காட்டவும் இல்லை, அவைகள் வந்ததாக என்னிடம் சொல்லவும் இல்லை. நானே "இது ஏது? எப்போது வந்தது? நன்றாயிருக்கிறது" என்று கேட்கவேண்டும் என்பது அவளுடைய உத்தேசம். நானோ "இந்தத் தோடுகளைப் பார்த்தீர்களா? எங்கள் அண்ணா அனுப்பினார். நேற்றுத் தபாலில் வந்தது. நன்றாயிருக்கிறதா?" என்று அவள் கேட்க வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டிருக்கிறேன் இதென்ன நடக்கிற காரியமா? நானும் கேட்க மாட்டேன். அவளும் சொல்ல மாட்டாள். ஆகையால், எப்போது சொல்லுகிறாளோ—எப்போது கேட்பாரோ—என்று இந்த விதமாகப் பரஸ்பரம் அவரவர் பாட்டுக்கு இருந்து வந்து விட்டோம். இன்னும் அவள் மனதுக்கு வருத்தம் உண்டாக்க வேண்டும் என்று எண்ணிக்கொண்டிருக்கிறேன். காரணம் சரியானது கிடைக்கவில்லை. பார்த்துக்கொண்டிருக்கிறேன்.

என் தமக்கை மறுசாதம் வைக்க வந்தாள். என் வீட்டுக்காரி தயிர்க் கிண்ணத்தைக் கையில் பிடித்துக்கொண்டு நின்றிருந்தாள். தமக்கை என் இலையில் சாதம் போட்டுக்கொண்டிருக்கிறாள் அதற்குள் நான் "அக்கா! இந்த "டீக்கா" எப்போது செய்தது? புதிதா? எவ்வளவாகிறது? வெகு ஜோரான கெம்புகள்! நல்ல பிரகாசம்!" என்று சொல்லிக்கொண்டே கொஞ்

சம் தலையைத்திருப்பி மனைவி முகத்தின்மீது கிண்டலாகக் கடைக்கண் பார்வையைவிட்டேன். என் காதலிக்கு இந்த பாணம் சுருக்கென்று தைத்திருக்கும் போலும்! தலையைக் கீழே தொங்கப் போட்டு விட்டாள். என் தமக்கை நான் போட்ட கேள்விகளுக்கு விடையாக "ஆமாம்! புதிதுதான்—எங்கள் ஊர் வேங்கட சுப்பாச்சாரி செய்தது. கூலி யெல்லாம் அடக்கம் அறுபது ரூபாயாகிறது. கொஞ்சம் நல்ல கல்லு" என்றாள். என் மனைவி வெறுவெறென்று என் பக்கம் வயிற்றெரிச்சல் பார்வை பார்த்தாள். அதில் ஆத்திரமும் ஆக்கிரோஷமும் கலந்தடித்தது தெரிந்து கொண்டேன். கலகம் இப்பொழுதுதான் முளைத்து வளர்ந்து, கவையாகிக் கொம்பாகி நல்ல மரமாகிப் பழுத்திருப்பதாக உணர்ந்தேன். அதற்குள் நாங்கள் சாப்பாட்டை முடித்து எழுந்து சிறிது நேரம் அந்தப் பேச்சும், இந்தப் பேச்சும் பேசி விட்டு அவரவர் அறைக்குப் போய்விட்டோம். மேஜையின் மேல் வெற்றிலை பாக்குத் தட்டைக் காணேம். வந்து கொடுப்பாளாக்கும் என்று எண்ணியிருந்தேன். பத்துமணி அடித்தும் அவள் வரவில்லை. இரண்டொரு தடவை அவளைக் கூப்பிடலாமா என்றுகூட நினைத்தேன். ஆனால் பிடிவாதம் என்னைக் கூப்பிட விடுகிறதா? கட்டிலில் படுத்து சிகரெட் பிடித்துக் கொண்டிருக்கிறேன்.

மணி பதினொன்றரை ஆயிற்று. என்படுக்கை அறைக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே வந்தாள் காதலி. நான் அப்போது அறிதுயில்—தூங்காமல் தூங்கத் தொடங்கினேன். கட்டிலுக்குப் பக்கம் வந்தாள். நின்றாள். எழுப்பலாமா, வேண்டாமா என்று ஆலோசித்துக்கொண்டிருந்தாள்போலும்! நின்று நின்று கடைசியில் "தூக்கமா?" என்றாள். நான் பதில் சொல்லவில்லை.

"வாஸ்தவமான தூக்கமாயிருந்தால் பேசுவீர்கள். திருட்டுத்தூக்கத்துக்குப் பேசமாட்டீர்கள் அல்லவா?" என்றாள்.

இந்தச் சமத்காரத்துக்குச் சிரிப்பு வராமல் இருக்குமா? நீங்களே சொல்லுங்கள். இந்தப்பக்கம் முகமாகத் திரும்பினேன். இம்மட்டுக்கே எனக்கு ஒரு மகிழ்ச்சி! என் சிரிப்பைக் கண்டுபிடித்து விட்டாள்.

"இந்த நாள்களில் ஜனங்களுக்குக் கண்கள் இருந்துங்கூடத் தெரியாமல் போய் விடுவது ஆச்சரியமே!" என்றாள்.

இது எனக்குக் கொடுத்த சூடு! இதுதான் ஆரம்பம் அந்தப்புர உபந்நியாசத்துக்கு.

"நல்ல பண்டிகை நாளில் வெற்றிலை பாக்குக் கொடுக்க மறந்து போவது ஆச்சரியம் அல்லவா?" என்றேன் நான்.

"ஏதாவது வீட்டுவேலைகளில் கவனமாய் இருந்திருப்பேன்—நீங்கள்தான் ஏன் கேட்டிருக்கக் கூடாது? இதுவும் தப்பா?" என்று சொல்லிக் கொண்டே வெற்றிலை "பீடா"வை என் கையில் வைத்தாள்; மென்று கொண்டே நான் சிகரெட்டைப் பற்றவைத்தேன். புகையை வெளியில் ஊதிக்கொண்டே ஜனங்களுக்குத் தெரியாமல் இருக்கிற கண்கள் குருட்டுக் கண்கள் என்பது வாஸ்தவமே! நான் இல்லை என்று சொல்ல மாட்டேன். இன்றைக்கு ஏதோ தொடங்கி விட்டீர்களே மகாராணி அவர்கள்! நல்ல நாள் பொல்லாத நாள் என்றுகூட இல்லாமல்! கொஞ்சம் சந்தோஷமாய்—கலகலப்பாய் இருந்து விட்டால் குடிமுழுகிப் போகும்போ லிருக்கிறது!

என்னமோ ஒரு விதமாய் ஆவேசம் பிறந்திருந்ததுபோ லிருந்ததே. எத ஞலோ? நானும் காலையிலிருந்து ஆலோசனை செய்துகொண்டே இருக் கிறேன். காரணம் தெரியவில்லை'' என்றேன்.

"ஏன் தெரிகிறது? பார்க்கக் கூடாது என்று இருக்கும்போது தெரியா தல்லவா? இன்னொருவர் கழுத்தில் இருட்டில் சிகப்புக் கல்லுகள் இருந் தால் அவைகள் பளிச்சென்று நன்ருகத் தெரிந்து விடுகின்றன—"

"யார் கழுத்தில்? யாருக்குத் தெரிந்து விடுகின்றன?" என்று ஆச் சரியத்தோடு கேட்டேன்.

"யாருக்குந்தான்! இஷ்ட மில்லாத வஸ்து சூரிய காந்தம் போல மின்னிக்கொண் டிருந்தாலும் கண்களில் படாது. அடுப்புக்கரி இருட் டில் இருந்தாலும் தெரிந்து விடுகிறது''

"இந்தச் சமயம் இப்படிச் சொல்லிடலாம் என்று நினைக்கிருய் போலிருக்கிறது. உன்னுடைய வார்த்தைகளுக்கு எனக்கு ஒன்றும் அர்த்தம் விளங்கவில்லை."

"ஆலோசனை செய்தால் விளங்குகிறது. தெரிந்து கொண்டும் இல்லை என்ருல் என்ன செய்வது? என் குற்றமா?"

யாருடைய கழுத்தில் சிகப்புக்கல் "டீக்கா" "இரு இரு—யாருடைய கழுத்தில் நீ தான் சொல்லேன்? ஓஹோ! எங்கள் அக்காள் கழுத்தில் பார்த்தேன் ஆமாம்! அதற்கென்ன இப்போது? நன்ருயிருந்ததிஞலே கேட்டேன்—"

"அது தெரிந்ததே யொழிய—"

"என்ன? இனி என்ன தெரியவேண்டும்? இன்னும் என்ன போட்டுக் கொண்டிருக்கிருள் அக்காள்? வேறு ஒன்றும் இருப்பதாகத் தெரியவில் லையே? புதிதாக இன்னும் என்ன—?

"புதிதாக இன்னும் என்னவா? உங்களுக்கு இப்போது ஒன்றும் புதி தாகவே தெரியவில்லையா? வாஸ்தவமாகச் சொல்லுங்கள்!"

"வாஸ்தவத்தில், எனக்குப் புதிதாக ஒன்றும் தெரியவில்லை. ஆஞல், காபி கூஜா கைநழுவி விழுந்ததும், பாயசக் கிண்ணம் என் இலையில் விழுந் ததும்— இவையா புதியவை? இவையே யாஞல் வெகு நன்ருகவே தெரிந் தன'' என்று சொல்லிக் கொண்டே நான் சிரித்தேன்.

"போதும் போதும் உங்கள் பரிகாசம்! சும்மா இருங்கள்! காலமே யிருந்து பார்த்துக்கொண்டுதான் இருக்கிறேன்—மநுஷாளுக்குத் தெரிகிறதா இல்லையா என்று! உம்! அதெங்கே வந்தது! உள்ளபடியே அந்நியோன்னிய மாகப் பிரியத்தோடு இருக்கிற புருஷன் பெண்சாதிகளுக்குள் எந்த வித மான அதிசயம் இருந்தாலும் தெரியாமல் போகாது."

"அதஞலே? நீ சொல்வது என்ன?"

"சொல்வது என்ன இருக்கிறது? என்னைத் திரும்பிப் பார்க்கிறீர்களா? என்று விடியற்காலத்திலிருந்து பார்த்துக்கொண்டிருக்கிறேன். தெரிந்து கொள்ளுவீர்கள் என்று எவ்வளவோ சந்தோஷத்தோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். அப்படியிருந்தும் என்ன பிரயோஜனம்? என் உடம் பில் இன்றைக்கு என்ன விசேஷம் இருக்கிறது என்று தெரிந்து கொள்ளா மல் போய்விட்டீர்கள் அல்லவா?"

"எங்கே? என்ன இருக்கிறது?" என்று நான் என் அருமைக் காதலியின் கைகளைப் பார்த்தேன். கழுத்தைப் பார்த்தேன்.—

"அங்கே என்ன இருக்கிறது? காதுகளைப் பார்த்தால் தெரிகிறது" என்று அவள் ஊடலுடன் உவகைக் குறிப்புத் தோன்றக் கூறினாள்.

நான் முகத்தை மேலெடுத்து அவள் கையைப்பிடித்திருந்தபடியே பார்த்தேன். "அடேடே! என்ன இது? இந்தத் தோடுகள் ஏது? எப்போது செய்தாய்? என்ன விலை? வெகு நன்றாயிருக்கின்றன! புஷ்பராகமா வைரமா இவைகள்? புஷ்பராகத்துக்கு இவ்வளவு ஒளி இருக்கிறதா? வைரந் தான் போலிருக்கிறது. உண்மையில் இவைகள் உன் முகத்துக்கு எவ்வளவோ அழகாயிருக்கின்றன? என்னிடம் சொல்லமாட்டாயா? எப்போது செய்தது சொல்லு?" என்றேன் அளவு கடந்த சந்தோஷத்தோடு.

"பிரியத்துக்கும் இதற்கும் சம்பந்தம் என்ன இருக்கிறது? உன்னுடைய காதுகளில் தோடுகள் போட்டிருக்கிற சங்கதி எனக்கு எப்படித் தெரியும்? எப்போதாவது காதுகளில் ஒன்றும் இல்லாமல் காலியாக இருந்ததுண்டா? தோடுகள் எப்போதும் இருந்துகொண்டுதானே இருக்கின்றன?"

"ஆனால், எப்போதும் உள்ள தோடுகளா இவைகள்? இது தெரிய வேண்டாமா?"

"எப்போதும் இருந்ததோ! அல்லவோ போகட்டும்—சொல்லக் கூடாதா?"

"என்ன சொல்லவேணும்? நானாக புதிய ரவைத் தோடு போட்டிருக்கிறேன். பாருங்கள்! அழகாயிருக்கிறதா? நான் இப்போது எப்படி இருக்கிறேன்? என்று வலிய வந்து கேட்கவேணுமா?—அல்லது ஓஹோ! புதிதாக இருக்கிறதே! எங்கே பார்க்கலாம்? இந்தத் தோடுகள் ஏது? நன்றாயிருக்கிறதே" என்று மற்றவர்கள் கேட்க வேணுமா?"

"ஆம்! ஆம்!! வாஸ்தவந்தான். ஏது அவ்வளவு அறிவு ஆண்களுக்கு? இது புதிதா, பழையதா என்று கிரகிக்கிற சக்தி எங்களுக்கு இருக்குமானால் ஓஹோ! ஆமாம்! இப்போது ஞாபகத்திற்கு வருகிறது ஒவ்வொன்றாக!—இதனாலே தான்போலிருக்கிறது எனக்குக் காபி இல்லாமல் போனது! கூஜா உடைந்துபோனது! என்னுடைய இலையில் பாயசக் கிண்ணம் குப்புறக் கவிழ்ந்தது! ஓ!—ஆமா! அதற்குள் மறந்துபோய் விட்டேன். நான் மத்தியானம் படுத்துத் தூங்கிக்கொண்டிருக்கும் போது காதில் இருந்த தோடு கைக்கு வந்தது. பிறகு அழகு பார்த்து முடிந்தது. அங்கிருந்து நான் பார்க்கிறேனா, இல்லையோ என்று என்னைத் திரும்பிப்பார்த்து, நான் பார்க்காமல் போனதினால் ஏமாற்றத்தோடு முகத்தைக் கருக்கிக் கொண்டு மறுபடியும் காதுகளில் வைத்துக் கொண்டது. ஆமா! இவை யெல்லாம் எனக்குத் தெரிந்துங் கூட—"

"அப்போது தூங்கிக்கொண்டிருந்தீர்கள் அல்லவா? பிறகு—"

"ஆமாம்! தூங்கிக்கொண்டேதான் இருந்தேன். தூங்கிக்கொண்டே எல்லாம் பார்த்தேன். எல்லாம் எனக்குத் தெரியும்!"

"திருட்டுத் தனம்"

"ஆமாம் பெரிய திருட்டுத் தனம்! நகையைப் பூட்டிக்கொண்டு புருஷன் தானாகப் பார்த்துக்கொள்ளுகிறானா இல்லையா என்ற திருட்டுத்தனம்!

பார்க்கவில்லையே, காட்டவேண்டும் என்று கூஜாவைக் கீழே போடுகிற திருட்டுத்தனம்'''

"போதும் போதும் சும்மா நிறுத்துங்கள்"

"நிறுத்திக் கொள்ளுகிறேன் தாயே. எல்லாத் திருட்டுத்தனங்களையும் சொல்லி—"

"போகட்டும், இப்போது என்னத்திற்கு இரண்டு பேரும்? நிஜமாகவே தோடுகள் காலையிலிருந்து உங்களுக்குத் தென்படவில்லையா?"

"தென்படாமல் போவது ஏன்? தென்பட்டது—ஆனால், நீ என்னோடு சொன்னாயா?"

"இல்லை—தெரிந்து கொள்ளுகிறீர்களோ இல்லையோ? என்று."

"தெரிந்தது. கேட்கவில்லை—நீ சொல்லுகிறாயோ இல்லையோ என்று. சரிக்குச் சரி தீர்ந்ததல்லவா?"

"உங்கள் அக்காள் கழுத்தில் "டீக்கா—"

அதொரு திருட்டுத் தனம். உன்னைச் "சத்தாய்க்க" வேணும் என்ற திருட்டுத் தனம்தான் என்று வைத்துக்கொள்ளேன். நான் நினைத்தபடியே நடந்தது.

"என்ன நினைத்தீர்கள்?"

"தோட்டுச் சங்கதி என்னிடம் நீ சொல்லவில்லை. ஆகையினால் நான் உன்னைக் கேட்கக் கூடாது. அக்காளை "டீக்கா" சங்கதி கேட்டால் உன் வயிற்றைப் புரட்டுமென்று தான்—"

"போதும் சும்மா இருங்கள்—பிறகு—"

"சத்தியமாய்ச் சொல் மனதில் வேக்காடு இருந்ததா இல்லையா அப்போது?"

"யாராவது சிரிக்கப்போகிறார்கள்?"

"ஏன்? உண்மையைச் சொன்னாலா?"

"இல்லை. பப்ளிக்கா சூரியப்பிரகாசம் போல டால் வீசிக்கொண்டிருந்த இந்தத் தோடுகள் பெண்சாதி காதில் இருந்த விஷயம் தெரியவில்லையே? கழுத்தில் நாலு மாலைகளின் சந்தில் எங்கேயோ மறைந்துகொண்டிருந்த "டீக்கா" எப்படித் தெரியவந்தது என்று—"

"உனக்கு மனக் குழப்பம் ஏற்பட்டுப் புழுங்கிவிட்டாய் அல்லவா? அதுவே போதும்! போகட்டும்—விஷயத்தைச் சொல்லு. இப்போதாவது மனங் குளிர்ந்ததா? இந்தத் தோட்டு விஷயம் எனக்கு மூர்தாம் நாள் அதாவது உனக்கு 'பார்சல்' வந்த தினத்திலேயே தெரியும். ஆகையால் இப்போது இங்கே புதிதாக ஒன்றும் இல்லை. ஆனால் உனக்கும் இந்தச் சிறு மூஞ்சித்தனம்—"

"அந்தப் பேச்சுப் பேசாதீர்கள். நமக்குள் எப்போதும் உள்ளதுதானே இந்தமாதிரிக் கலகம்! இந்தச் சமயம் செலவு அல்லவா? எந்த நாளில் அம்மா உங்களுக்குச் செலவுவந்தபோது சண்டையில்லாமல் இருந்தது?—இனி மறந்துபோவோம்.

# மாணவர் கடமை.

## ஒழுக்கம் உயிரினும் சிறந்தது.

(தமிழாசிரியர். பா. பக்கிரிசுவாமி செட்டியார்)

மாணவர் கடமை என்ற தலைப்பின் கீழ் முதன்முதல் யான் "ஆனந்த" னில் கட்டுரை எழுதத் துணிந்ததற்குச் சில காரணங்க ளுண்டு. தற்பொழுது மாணவரா யிருப்பவரே பிற்காலத்தில் தேசாபிமானத்தோடு தாய் நாட்டின் அபிவிருத்திக்காக உழைக்கும் கௌரவம் வாய்ந்த குடிகளாய் மாறப்போகின்றவ ராதலால் அவர்களுக்கான கடமைகளை அறிவுறுத்த விரும்பியது ஒன்று. "ஏதேனும் உலகத்திற்கு உழைக்க வேண்டும் என்ற எண்ணம் உனக்குளதாயின், பொது ஜனங்களிடையே போய்த் துன்பப் படாதே! பள்ளி மாணவர்களிடையே தொண்டு செய்! உன் எண்ணம் நிச்சயமாக நிறைவேற்றப்படும்" என்று ஜெர்மானிய அறிஞர் ஒருவர் கூறியவாறு, மாணவர்களிடம் இன்றியமையாத சில பொருள்களை வலியுறுத்தி எனது கடனை முடிக்கக் கருதியது மற்றொன்று.

## ஒழுக்கமே உயர்வளிக்கும்

அடைதற்கரிய மானிடப் பிறவியின் பருவங்கள் சிலவற்றுள் இளமை சிறந்ததென்பது உலகறிந்தது. இளமைப் பருவந்தான் வாழ்வின் உயிர் நாடியா யுள்ளது. வாலிப வயதுதான் வருங் கால வாழ்க்கைக்கு அடியா யிருப்பது. வாழ்க்கை யெனும் மாடியை அடைய இளமைப் பருவ முதற் படியா யிருக்கிறது. இளமையிலேயே சக்தி, வலிமை, வீரம் இவற்றிற்கு இருப்பிடமானது. முடிவாய்க் கூறவேண்டுமாயின் ஒருவனது உயர்வும், தாழ்வும் அவனுடைய வாலிப ஒழுக்கத்தில் வயப்பட்டிருக்கிற தென்னலாம். இத்தகைய இளமைப் பருவம் பெரிதும் பாடசாலையிலேயே கழிக்கப்படுகின்றது. பள்ளிக்கூடமே இளைஞரின் மனதைப் பண்படுத்தும் இடமா யிருக்கின்றது. அங்கு எது விதைக்கப்படுகிறதோ அதுவே நாளடைவில் செழித்து வளருகின்றது. பள்ளிப் பருவத்தில், இளம் வயதில் எத்தகைய அபிப்பிராயங்களும், நோக்கங்களும் வேரூன்றுகின்றனவோ அவற்றிற்குத் தக்கவாறே பிற்கால நடவடிக்கைகளு மிருக்கு மென்பதற் கைய மில்லை. அவற்றிற்குத் தக்கபடிதான் தாய் நாடு நன்மையையோ, தீமையையோ அடையும் என்பதுவும் உண்மை. போருக்குப் புறப்படும் வீரனொருவன் எவ்வாறு முன்னரே தனக்குத் தகுதியான படைகளைத் தயார் செய்து

கொள்ள வேண்டுமோ, அங்ஙனமே பிற்கால வாழ்க்கையில் ஈடுபடப்போகும் இளைஞன் மாணவன் நல்லொழுக்கத்தில் நடக்க வேண்டுவது அவசியமே யாகும். கல்வி கற்பது கேவலம் வயிற்றுப் பிழைப்பிற்கென் றெண்ணலாகாது; பெரும் பான்மை ஒழுக்கத்திற்கே என்று உன்னவேண்டும், "தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும்" ஆதலின், இளமையிற் பற்றிய ஒழுக்கம் பல்லாண்டிற்குப் பின்னரும் நிகழும். எனவே, மாணவர் நல்லொழுக்கத்தில் பயிலுவதே முதற் கடமை யாகும்; எழுதப் படிக்கக் கற்பதை இரண்டாவதென்னலாம். மொழி அறிவாகிய வெறுங் கல்வி ஒரு பயனையும் அளியாது. கல்வியின் மூலமாக நல்லொழுக்க நன்னெறிகளை யுணர்ந்து அவ்வழி நின்றொழுகலே இன்றி யமையாதது. இதனை "ஓதலின் சிறந்தன்று ஒழுக்கமுடைமை" என்ற முதுமொழி வலியுறுத்துகின்றது. இன்னும் ஒழுக்கத்தின் உயர்வைக் கூற வந்த திருவள்ளுவனார் "ஒழுக்கம் விழுப்பந் தரலான் ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்" என்றார். மேலும், உலகத்தை நோக்குமிடத்து ஒருவனிடத்து வெளிப்படையாகக் காணப்படும் ஒழுக்கத்தாலேயே அவன் மதிப்போ, அவமதிப்போ அடைகின்றான். மகாத்மா காந்தியடிகள் உலகம் போற்றும் உத்தமராய் விளங்குவதற்கு அவர்கள் கொண்ட சிறந்த ஒழுக்கங்களன்றோ முக்கிய காரணமாய்த் துலங்குகின்றன? பண்டு நம் மிந்திய நாடு பல் வகையாலும் சிறப்புற்றிருந்த தென்றால் அதற்குக் காரணம், அக்காலத்தில் வதிந்த இளைஞரின் ஒழுக்கம், அறிவு இவைகளே யென் றுரைப்பது மிகையாகாது.

## தற்கால நிலை

இத்தகைய அத்தியாவசியமான ஒழுக்கம் நம் நாட்டுத் தற்கால மாணவரிடம் திருப்தியாக இருக்கவில்லை யென்பதை யான் வருத்தத்தோடு உணர்த்திக்கொள்கின்றேன். ஆன்மார்த்த அழுக்கு மாணவரிடையே தற்காலத்தில் அதிகமாகப் பரவியுள்ளது. இது தொத்து நோய் போல் பரவி எல்லை இல்லாத தீங்குகளை இயற்றுமே என்று தான் அறிஞர்கள் இதுகாலை இரங்குகின்றனர். மாணவர் தங்களுக்குள் பரவி வரும் சில தீய பழக்கங்களை இனியேனும் விடவேண்டும்; தங்கள் வாய்களைப் புகைப் போக்கிகளாக மாற்றுவதை நிறுத்தவேண்டும். பீடி, சிகரெட் பிடிப்பதால் உடலுக்கு ஊறு உண்டாவதை எண்ணி, அடியோடு அவற்றைத் தொலைக்க வேண்டும். உள்ளத்தையும், உடலையும் பரிசுத்தமாய் வைத்துக்கொள்ள வேண்டும். மாணவர்கள் தங்கள் ஒழுக்கத்தைப்பற்றித் தாங்களே கவலையுற்று ஒழுகாத வரையில் பய னில்லை. "மாணவர்களின் ஒழுக்கத்தை ஆசிரியர் கவலை கொண்டு கடுமையான முறையில் சீர்திருத்தவேண்டும் எனும் கொள்கையை யான் பிற்போக்கான அபிப்பிராயமென்றே உரைப்பேன். "கல்விச் சாலையிலுள்ள மாணவர்களின் ஒழுக்கத்தைச் சீர்படுத்த வேண்டுமானால் அதற்கு அந்த மாணவர்களையே பொறுப்புள்ளவ ராக்குவதுதான்

மிக உசிதமான வழி" என்று அனுபவ முறையிற் கண்ட ஆங்கில நிபுணர் ஸ்ரீ. எர்னஸ்டு ஏ. கிராடாக் மொழிகின்றார். எனவே, மாணவர்கள் தங்கள் ஒழுக்கத்திற்குத் தாங்களே ஜவாப்தாரிகள் என்பதை உணர்ந்து சன்மார்க் கத்தில் ஒழுகுமாறு கோருகின்றேன்.

## தாய்மொழிப் பற்று

மாணவர் மனதில் முதலில் அமையவேண்டுவது தாய்நாட்டின்பால் அன்பு. நாட்டுப் பற்றுண்டாகத் தாய்மொழிப் பற்று இன்றியமையாது வேண்டற்பாலது. மகாத்மா காந்தியடிகள் "தாய்மொழியின்வழியே பிள்ளைகளுக்குக் கல்வி பயில்வித்தல் மிக முக்கியம். தாய் மொழியை அலட்சியம் செய்வது தேசியத் தற்கொலை யாகும்," என்று கூறுகின் றார். ஆனால், இந் நாளில் நம் நாட்டிற்குரிய இயற்கைக் கல்வி மாணவ ரிடையே சிதைக்கப்பட்டிருக்கிறது. "ஆங்கிலம் பயில்வதுதான் அறி வுடைமை" என்று மாணவர் கருதுகின்றனர். இது அறியாமை யாகும். நான் ஆங்கிலம் கற்கலாகாதென்று கூறவில்லை. ஆங்கிலம் உலக மொழி யாகப் பரவி வருவதாலும், அரசாங்க பாஷையாக இருப்பதாலும் அதனைப் பயில்வது அவசியமென்றே உரைப்பேன். ஆனால் "ஆங்கிலக் கல்வியில்தான் அறிவுண்டு" என்பதையும், "தாய்மொழியை அசட்டை செய்து கற்பதுதான் கௌரவமும் நாகரிகமுமாகும்" என்பதையும் நான் ஏற்றுக்கொள்ளேன். தாய் மொழி விடுத்து பிறமொழி படிப்பது "மாதா வயிறெரிய மகேஸ்வரி பூஜை செய்வ"தை ஒக்கு மென்பதை உணர்த்துகின்றேன். தாய்மொழியை அலட்சியஞ் செய்து அன்னிய மொழியையே சிறந்ததாக எண்ணும் எவரை யும் உலகம் கௌரவமாகக் கருதா தென்பதைக் கவனிக்கத் தூண்டுகின் றேன். ஆங்கிலர் முதலிய அன்னிய நாட்டினர் எத்தேயத்தி லிருந்தாலும், பல மொழிகளைப் படித்திருந்தாலும் தங்கள் தாய்மொழியையே பேசும் போதும் எழுதுங்காலும் உபயோகித்து அதனிடத்துத் தனிப்பற்றுக் காட்டு கிறார்களே யன்றி அசட்டை செய்கிறார்க ளில்லை. மேல் நாட்டாரைச் சாயல் பிடிக்கும் நம்மவர் அவர்பால் காணப்படும் இத்தகைய நற்குணங் களை ஏன் நோக்குவ தில்லை என்று கேட்கிறேன்?

## தமிழின் பெருமை

எவர்க்கும் அவரவர் தாய்மொழிக் கல்விதான் அவசிய மாகும். ஒவ் வொரு நாட்டின் அமைப்புக்குத் தக்கவாறு மொழிகள் அமைந்துள்ளன. நமது நாட்டின் இயல்புக் கேற்றமொழி தமிழ் மொழியேயாகும். மாணவர் தமிழ்மொழிமீது கவலை செலுத்தாது வாழ்வது இயற்கை அன்னையை மறந்து வாழ்வதாகும். தாய்மொழிமீது பற்றில்லாத எந்நாட்டாரும் முன் னேற்ற முற முடியாது. அடிமைச் சங்கிலியில் கட்டுண்டிருந்த அயர் லாந்து, பின் விடுதலை அடைந்ததற்குக் காரணம் மறந்திருந்த நாட்டு மொழியை வளர்த்த தன்றோ?

நிற்க, நம் தாய் மொழியாகிய தமிழ்மொழி இதர மொழிகளைப் போன்ற தன்று. பெய ரளவிலேயே இனிமையெனும் பெயரை யுடையது; முற்றுப் பெற்றது; சிறு சொற்களை யுடையது; நோய் கொண்டோர், மூப் புற்றோர், சிறுவர் முதலோர்க்கும் உச்சரித்தற்கு எளிதானது; கன்னடம், மலையாளம் தெலுங்கு முதலிய பல மொழிகளுக்கு முதலானது; "சுருங்கக் கூறல் என்னும் அழகில் விரிந்த பொருட்பொலி வுடையது; உள்ளத்தின்

தோற்றங்களை வெளியிடுவதற்கு நுணுக்கமாகவும், தத்துவ வகையாகவும் அமைந்த சொற்பொலி வுடையது; பிறமொழிச் சொற்களை வேண்டாது நடைபெறும் பெருமை யுடையது; ஆரியம், கிரீக் முதலிய மொழிகளிலும் கலந்துள்ளது; வடமொழிக்கு முற்பட்டது. மற்றும் இதன் பெருமைகள் எண்ணற்றன. உயிர்க்கு உறுதி பயக்கும் உண்மைகள் நிறைந்த நூல்கள் தமிழ்மொழியில் பலவுண்டு. திருக்குறள் ஒன்றே இதனை உண்மையெனவொப்பச் செய்யும். திருக்குறளில் அடங்கியுள்ள உண்மைகள் இவ்வுலக மழிந்து வேறு உலகம் ஏற்படினும் அவ்வுலகும், ஏற்றுக்கொள்ளும் சிறப்பினை யுடையவை. மற்றும் தமிழன்னையின் அணியாகிய சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, குண்டலகேசி, வளையாபதி ஆகிய ஐம்பெரும் காப்பியங்களின் அருமையை என்னென் றுரைப்பது? எம்மொழியினும் இனிய மொழியும், தெய்வ மணங்கமழும் சொற்களும் கேட்கவும் ஆனந்திக்கவும் நிறை சுவை யுடையதுமான தமிழ்மொழியின் மகிமையை எவரே அளவிடற் குரியார்? தமிழ் மொழியை நீங்கள் சிறிதுகாலம் வரைச் செவ்வையாய்க் கற்றுச் சுவைத்து, அதன் அமுதினை ஒருதரம் பருகி விட்டால் பின்னர் தீஞ்சுவைகொண்டு இறுகக் கட்டிக் கொள்வீர் என்பது திண்ணம். தமிழினிமையில் ஆழ்ந்திருந்த காலஞ்சென்ற தேசீயக் கவி சுப்பிரமணிய பாரதியார் "யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல் இனிதாவ தெங்கும் காணோம்" என இசைத்ததை நோக்குங்கள். நமது தாய்மொழியாம் இனிய தமிழ் மொழியை ஆர்வத்தோடு பயிலுங்கள்! அதன் வளர்ச்சிக்குப் பாடு படுங்கள்!

## சரித்திர ஆராய்ச்சி

இன்னும் இன்றியமையாத இரண்டு, மூன்று பொருள்களைக் குறிப்பிட்டு எனது கட்டுரையை முடித்துக்கொள்கிறேன். மாணவர்க்கு அவர்களது முன்னோரைப் பற்றிய அறிவும், நினைவும் அவசிய மாகும். ஆகவே, அந்நோக்கினை அடிப்படையாகக் கொண்டு எழுதப் பெற்றுள்ள சரிதங்களை ஆராய்ச்சி செய்யவேண்டும். தங்கள் நாட்டின் பழமை, நாகரிகம் முதலியவற்றைத் தெரிந்து கொள்ளவேண்டும். பிற நாடுகளின் சரித்திரங்களையும் படித்தறிதல் நலமே யாகும். சரித்திரங்களை ஆராய்வதால் வாழ்க்கைக்கு அவசியமான விஷயங்களை உணர்ந்துகொள்ளுதற் கியலும். ஆதலின், சரித்திர ஆராய்ச்சி மாணவர்க்கு அவசியமானதென்று யான் வலியுறுத்துகின்றேன்.

மற்றும், அறிவு வளர்ச்சிக்குச் சரித்திரக் கல்வி ஆதாரமா யிருப்பது போல பல ஊர்களின் பழக்கமும் மிக அவசிய மாகும். வெறும் எழுத்துப் பூச்சிகளாக இருப்பதைவிட நாட்டு வளப்பத்தையும் அறிதல் நலம். நாட்டின் பல பாகங்களையும் சுற்றி வருகையில் அங்கங்கேயுள்ள மக்களின் நடையுடை பழக்க வழக்கங்கள், இயற்கை செயற்கைக் காட்சிகள் இவை யனைத்தையும் நேரே கண்டு களிக்கவும், மனம் பண்பட்டு அறிவு வளர்ச்சி யடையவும் முடியும். இவ் வுலகத்தைப் பலவித பாடங்களை யுடைய ஒரு சிறந்த புத்தகமென்று கூறலாம். அதைச் சுற்றிப் பார்ப்பதுதான் அதனைப் படிப்பதாகும். இங்கிலாந்து, ஐரோப்பா, அமெரிக்கா முதலிய நாடுகளில் ஊர் சுற்றிப் பார்ப்பதை மாணவர்க்கு ஒரு முக்கிய பாடமாக வைத்திருக்கின்றனர். பள்ளிக்கூட விடுமுறைக் காலத்தில் நாட்டு மாணவர்கள் முடிந்தவரையில் நெடுகலுஞ் சென்று சுற்றிப் பார்த்து வருகின்றனர். நம் நாட்டி

லும் மாணவர்கட்கு இவ்வசதி வேண்டும். இது பெற்ரோர்கள் கவனித்துச் செய்யவேண்டிய காரிய மாகும். எனினும், மாணவர்கள் ஊர் பார்ப்பதில் ஊக்கங் கொள்வாராக.

## செயலில் வேண்டும்

கடைசியாக நான் வற்புறுத்தும் விஷய மொன்றே உண்டு. உத்தியோகம் பெறுவதுதான் கல்வி பெற்றதன் பயன் என்பது தற்கால மாணவருடைய கொள்கையாக இருக்கிறது. துரைத்தன உத்தியோகந்தான் கௌரவம் என்ற அபிப்பிராயம் பரவி விட்டது. உத்தியோக மென்பது சேவகா விருத்தி என்றும், அதமத் தொழிலென்றும் அவர்கள் கருதுவதே இல்லை. தவிர, எல்லோரும் உத்தியோகம் பெறும் நோக்கத்தோ டிருப்பதாலேயே எங்கும் வேலை இல்லாத் திண்டாட்டம் அதிகமாய் விட்டது. மாணவர்கள் "வர்த்தகம், கைத்தொழில் முதலிய சுயாதீனத் தொழில்களே கண்ணியமும் செல்வமும் அளிக்கத் தக்கவை" என்பதை இனியேனும் உணர வேண்டும். "கோழி மேய்த்தாலும் கும்பேனிக் கோழியாக இருக்கவேண்டும்" என்ற அடிமை எண்ணத்தை ஒழித்து, "கோழி மேய்த்தாலும் நம் கோழியாக இருக்கவேண்டும்" என்ற உரிமை உணர்ச்சி பெறவேண்டும்.

இதுவரை யான் எழுதிய யாவும் மாணவரது எதிர்கால நலத்திற்கும், தாய் நாட்டின் முன்னேற்றத்திற்கும் இன்றியமையாதவை யென்பதை மறுபடியும் உங்களுக்கு வற்புறுத்துகின்றேன். எதையும் கேட்டதால் பயனில்லை. படித்ததைச் சிந்தித்துச் செயலில் காட்டாத வரையில் அவ்வளவும் வீண்தான். எனவே மாணவர்கள் இனியேனும் விழிப்படைந்து மேலே படித்தவை யனைத்தையும் நினைத்து வேண்டுவன செய்யுமாறு விரும்புகின்றேன். அன்னை பாரத தேவி மாணவர்களை ஆசீர்வதிப்பாளாக!

# தமிழ்மொழியின் பெருமை

—————(o)—————

(பொ. திருகூடசுந்தரம் பிள்ளை, எம். ஏ., பி. எல்.)

" சூழ்கலி நீங்கத் தாய்மொழி
யோங்கத் துலங்குக வையகமே."

உலகிலுள்ள ஒவ்வொரு ஜாதியாரும் தங்கள் தாய்மொழியினிடம் அன்பு பூண்டு அதைப்போற்றி வளர்த்தல் சகஜம். ஆனால் தமிழர்க்குத் தங்கள் தாய்மொழியாகிய தமிழ் மொழியிடம் அளவு கடந்த அன்பு உண்டு. உலகிலுள்ள பாஷைகளி லெல்லாம் தங்கள் தமிழ்ப்பாஷையே உயர்ந்தது என்பது அவர்கள் அபிப்பிராயம். அதற்கு அவர்கள் கூறும் காரணங்கள் பல. அவை புராண சம்பந்தமான காரணங்கள், சரித்திர சம் பந்தமான காரணங்கள் என இருவகைப்படும். முற்காலத்திலிருந்த தமிழ்ப் புலவர்கள் கூறி வந்தவை முன்னதான புராணக் காரணங்கள் மட்டுமே. இக்காலத்திலுள்ள தமிழ்ப் பண்டிதர்களும், தமிழும் ஆங்கிலமும் ஒருங்கு கற்றுள்ள அறிஞர்களும் தமிழின் பெருமைக்குப் புராணக் காரணங்களோடு சரித்திரக் காரணங்களும் கூறிவருகின்றனர். முன்னோர் புகழ்ந்துவந்த புராண சம்பந்தமான புகழுரைகளெல்லாம் கீழ்க்கண்ட மூன்றில் அடங்கும்.

## புராணக் காரணங்கள்

(1) தமிழ்ப்பாஷை கடவுளாலேயே சிருஷ்டிக்கப்பட்டது. சம்ஸ் கிருதம் தவிர ஏனைய பாஷைகள் சம்பந்தமாய் இங்ஙனம் இயம்ப இயலாது. அவைகள் எல்லாம் மனிதனாலேயே உண்டாக்கப்பட்டன.

சிவபெருமானே தமிழ்மொழியைச் சிருஷ்டித்து அதை உடனே அகத் திய முனிவர்க்கு உபதேசித்துத் தென்னாடு அனுப்பினார். அகத்தியர் தென் னாடு போந்து, தமிழர்க்குப் பாஷையைக் கற்பித்ததோடு இலக்கணமும் இயற்றியருளினார். இப்பொழுது இறந்துபடாமல் எஞ்சி நிற்கும் தமிழ் நூல்களில் மிகப் பழமையானதெனை எல்லோரும் ஒப்புக்கொண்டுள்ள தொல் காப்பியம் செய்த ஆசிரியர் தொல்காப்பியர் அகத்திய முனிவரின் பிரதம ஆசிரிய ராவர்.

(2) தமிழ் மொழியினிடத்துக் கடவுளுக்கு அன்பு அதிகம். இத் தகைய அன்பு இதர பாஷைகளிடத்து உண்டென்று கூற முடியாது.

சிவபெருமான் அகத்தியரைத் தென்னாட்டுக்கு அனுப்பிய சில காலத் திற்குப் பின்னர் அவ்வினிய பாஷையைச் செவிமடுக்க விரும்பித் தாமும் தமி ழகம் வந்து தமிழ்ச்சங்கத்தில் தலைமை வகித்து சங்கப் புலவரோடு தமி ழாராய்ந்தார். தமிழில் பல கவிகளும் இலக்கண நூலும் செய்தருளியிருக் கின்றனர்.

(3) தமிழ் மொழியின்பாலுள்ள அன்பின் மிகுதியால் அம் மொழியை உபயோகித்துக் கவிகள் செய்து வேண்டிக்கொள்ளும் தமிழ்ப்புலவர்களின் பிரார்த்தனைக் கிணங்கிக் கடவுள் இயற்கைக்கு விரோதமான பல அற்புதச் செயல்களை நிகழ்த்தியிருக்கின்றனர். இங்ஙனம் செய்தது ஏனைய மொழி களில் காணப்படுமோ ?

சிவபெருமான்: சம்பந்தர்க்காகத் தமிழ் எழுதிய ஏடு நெருப்பில் வேகா திருக்கச் செய்தார்; அப்பர் சம்பந்தர்க்காக வேதாரணியக் கதவுகளைத் திறந்து அடைத்தருளினர்; சுந்தரர்க்காகத் தூது சென்றார்.

கம்பர்: கவி சொல்லி விஷம் தீண்டியவனை உயிர்ப்பித்தல்; வில்லிபுத்தூ ராழ்வார் பாரதம் பாடிக் கண்பெறல்; ஒட்டக்கூத்தர் ஈட்டியெழுபது பாடி முண்டம் உயிர்த்தெழச் செய்தல்; நக்கீரர் திருமுருகாற்றுப் படைசெய்து பூதத்தினின்று வீடு பெறல்; ஔவையார்: பலாத்தழைக்கப் பாடல் முதலிய வரலாறுகளையும் கவனிக்க.

இம் மூன்று காரணங்களும் உண்மையானவைதாமா ? இவை உண்மை யென்று வைத்துக்கொண்டாலும் இவற்றைக் கொண்டு ஒரு பாஷையின் ஏற்றத்தை நிர்ணயிக்க இயலுமா ? என்ற விஷயங்களை ஆராய்ந்தறிதல் அவ சியம். மேற்கூறிய மூன்று புகழ் உரைகளையும் ஒவ்வொன்றாய்க் கவனிப் போம்.

## கடவுள் சிருஷ்டி

என்பது முதற் காரணம். இதை இக்காலத்திலுள்ள அறிஞர்கள் யாரும் ஒப்புக்கொள்ளமாட்டார். "உலகத்தையும் அதிலுள்ள ஜீவராசிகளையும் ஏதேனும் ஒருநாள் திடீரென்று "கடவுள் தோற்றுவித்தார்" என்று கூறுவது எவ்வளவு பிசகாகுமோ அவ்வளவு, கடவுள் திடீரென்று ஒரு பாஷையை உற்பத்திசெய்து தந்தார்" என்று கூறுவதும் பிசகாகும். "உலகம் தற்பொழு துள்ள இயல்பை அடையப் பல்லாயிரக்கணக்கான வருஷங்கள் கழிந்தன என்றும், உலகத்திலுள்ள ஜீவஜெந்துக்கள் ஒன்றினின்று ஒன்று தோன்றி வளர்ந்து வந்து கடைசியில் மனிதன் பிறத்தற்கும் பல்லாயிரக்கணக்கான வருஷங்கள் ஆயின என்றும் அறிஞர்கள் சித்தாந்தம் செய்கின்றனர். அது போல் மனிதன் தோன்றினவுடனேயே பாஷையும் தோன்றிவிடுவதில்லை. மனிதர்கள் பெருகி ஒருவரோடொருவர் உறவாட ஆரம்பித்து அதன் பய னாய் நாளடைவில் அவர்கள் அறிவு வளர்ச்சிக்குத் தக்கவாறு அவர்கள் தங் கள் கருத்தை ஒருவர்க்கொருவர் தெரிவித்துக்கொள்ள உபயோகிக்கும் கருவியே பாஷையாகும். ஆகவே எந்த பாஷையும் கடவுளால் சிருஷ்டிக் கப்படுவதுமில்லை; தானாகவே திடீரென்று புத்தம் புதிதாய்ச் சகல அம்சங் களுடனும் தோன்றிவிடுவதுமில்லை. ஆகையால் தமிழ்ப் பாஷையைக் கட வுளே சிருஷ்டி செய்தார் என்று சொல்வது பொருந்தாத காரியம்.

உண்மை இவ்விதமிருக்க, தமிழ்மொழியைக் கடவுளே சிருஷ்டித்துத் தந்தார் என்று வைத்துக்கொண்டால் அதிலிருந்து நாம் அறியக்கிடப்பது என்ன? உலகத்தில் மனிதனைக் கடவுள் சிருஷ்டித்தார் என்றால் உலகிலுள்ள பல ஜாதியாரையும் கடவுளே சிருஷ்டித்தார் என்றே பொருள்படும். அங்ஙனம் அவனியிலுள்ள மனித ஜாதியார் அனைவரையும் படைத்திருந்தால் அவர்கள் ஒவ்வொருவருக்கும் உரிய பாஷையையும் கடவுள் உண்டாக்கிக் கொடுத்தார் என்பது பெறப்படுமன்றோ? சகல ஜாதியாரையும் படைத்தது போல சகல பாஷைகளையும் படைத்துத் தந்தாரென்றால் தமிழ்ப்பாஷை மட்டுமே கடவுளால் ஆக்கப்பட்டது என்று பெருமை பேசிக்கொள்வது எங்ஙனம் ஒப்புக்கொள்ளக் கூடியதாகும்? கடவுள் சிருஷ்டி என்னும் புகழ் தமிழுக்குண்டானால் மற்ற பாஷைகளுக்கும் உண்டு என்றே கூறவேண்டும். அப்பொழுது தமிழ் மற்ற பாஷைகளைவிட இந்தக் காரணத்தால் உயர்ந்தது என்பது பொய்யாகிவிடுகிறது.

"இல்லை; தமிழ்ப் பாஷையை மட்டுமே கடவுள் சிருஷ்டித்தார்; இதர பாஷைகளை அவர் உண்டாக்கவில்லை; அவற்றைப் பயிலும் ஜனசமூகங்களே சிருஷ்டித்துக்கொண்டன" என்று சிலர் கூறக்கூடும். இவ்வாறு கூறுவது உண்மையென்று ஒப்புக்கொண்டால் இரண்டு விஷயங்களை ஒப்புக்கொள்ள வேண்டி ஏற்படும்.

(1) இதர பாஷைகளை மனிதர்கள் உண்டாக்கும் பொழுது தமிழ்ப் பாஷையை மட்டும் கடவுள் உண்டாக்குவானேன்? அங்ஙனம் செய்தற்குக் காரணம் கடவுளுக்குத் தமிழர்களிடம்தான் அன்பு உண்டு என்று கூறுவதா? அல்லது இதர ஜாதியார்களிடம் உள்ள அன்பைவிட தமிழர்களிடம் உள்ள அன்பு அதிகம் என்று சொல்வதா? அல்லது கடவுளுக்கு இதர பாஷைகளைச் சிருஷ்டிக்க வல்லமையில்லை; தமிழ் ஒன்றைச் சிருஷ்டிக்கத்தான் வல்லமையுண்டு என்று புகல்வதா?

இதர ஜனசமூகங்களைச் சிருஷ்டித்து அவர்களுக்கு வேண்டிய மொழிகளைச் செய்துதராது விடுத்து தமிழர்க்கு மட்டும் தமிழ்மொழியைச் சமைத்துதவியதாகக் கூறுவது கடவுளுக்குப் பட்சபாதகுணம் கற்பிப்பதாகும். கடவுள் ஒரே பாஷையைச் சிருஷ்டிக்கப் பிறஜாதியார் பல பாஷைகளைச் சிருஷ்டித்துக்கொண்டனர் என்றால் கடவுளைவிட மனிதர்களே வல்லமை மிகுந்தவர் என்று கூறுவதாகும்.

(2) இன்னொரு விஷயம். தமிழ்மொழியை மட்டும் கடவுள் செய்தருளினார் என்றால் தமிழர்க்குத் தங்கள் மொழியைச் சிருஷ்டித்துக் கொள்ளப் போதிய ஆற்றல் இல்லை; அவ்விஷயத்தில் அவர்கள் உலகிலுள்ள இதர ஜனங்களைவிட மிகத் தாழ்ந்தவர் என்று ஏற்படும். அத்தகைய தாழ்ந்த நிலைமையைத் தமிழர் ஏற்றுக்கொள்ளத் தயாராயிருக்கின்றனரா? ஆகையால்

முன்னோர்கள் மொழிந்துவந்த முதற்காரணம் முற்றிலும் பிசகு என்ற முடிவுக்கு வரவேண்டி யிருக்கிறது.

கடவுள் அன்பு மிகச் செய்தது

என்பது அவர்கள் அறைந்து வந்த இரண்டாவது காரணம். அதன் உண்மையையும் சிறிது ஆராய்வோம். கடவுள் உலகில் சகல ஜாதியாரையும் படைத்தவரானபடியால் கடவுள் தந்தை, மனிதவர்க்கம் குழந்தைகள் என்று எல்லோரும் கூறுகின்றனர். அஃதுண்மையாளுல் கடவுளுக்குச் சகல ஜாதியாரிடமும் ஒரேவிதமான அன்புதான் உண்டு என்பதை மறுக்கமுடியாது. அதுபோல் சகல பாஷைகளையும் கடவுளே சிருஷ்டி செய்து தந்தார் என்று வைத்துக்கொண்டாலும் அவர்க்கு அவைகளிடத்திலுள்ள அன்பில் ஏற்றத் தாழ்வு கற்பிக்க முடியாது. ஆகையால் இதர பாஷைகளிடத்திலுள்ளதை விட தமிழ் பாஷையிடத்து அவருக்கு அன்பு அதிகம் என்று கூறுவதை யாரும் ஏற்றுக்கொள்ள இயலாது. எல்லாப் பாஷைகளிடத்தும் இறைவனுக்கு ஏற்றத் தாழ்வில்லாத சமமான பட்சம் உண்டு என்று கூறுவிடில் கடவுளுக்குப் பட்சபாதம் என்னும் பாப குணத்தைக் கற்பிக்கவேண்டி வரும். அத்தகைய குணம் மனிதத் தந்தைக்கு உண்டு என்று ஒப்புக்கொள்ளலாம்; ஆனால் அது ஆண்டவனுக்கும் அமைந்துள்ளது என்று சொல்லுதல் முடியாது.

தவிர, தமிழ் பாஷையினிடத்து மட்டும் சர்வேஸ்வரனுக்குப் பிரியம் உண்டு என்று கூறினால் அவ்வன்புக்குக் காரணம் என்ன? இதர பாஷைகளை அவர் சிருஷ்டிக்காமல் தமிழை மட்டும் சிருஷ்டித்தது காரணமாகுமோ? தாம் சிருஷ்டித்ததற்காகத் தமிழினிடம் அன்பு கொண்டார் என்றால் அது கடவுளுக்குச் சுய நலங் கற்பிப்பதாகும். காக்கைக்கும் தன்குஞ்சு பொன் குஞ்சு என்னும் பழமொழியைப் பரமேஸ்வரன் விஷயத்திலும் பகரலாமோ? தகுதியுள்ள இடம் தயையும் தகுதியில்லாத இடம் இரக்கமும் அல்லவோ ஆண்டவன் அரும்பெருங் குணங்களாகும். தகுதி நோக்காது சுய நலமே நோக்கி ஒன்றினிடம் அன்பு செலுத்துதல் கடவுள் செயல் அன்று.

கடவுளுக்குத் தமிழினிடம் மட்டும் அன்பு ஏற்பட்டிருப்பதற்குத் தமிழ் பாஷை இதர பாஷைகளைவிட உயர்ந்தது என்பதே காரணம் என்று கூறக் கூடும். சில பாஷைகள் நல்ல வளர்ச்சியுற்றும் சில பாஷைகள் வளர்ச்சி குன்றியும் உள்ளது உண்மையே. ஆனால் அது கடவுள் சில பாஷைகளிடத்து அன்பு மிகுந்தும், சில பாஷைகளிடத்து அன்பு குறைந்தும் உளர் என்று கூற இடந்தருமோ? மேலும்,

குழலினிது யாழினிது என்பர் தம்மக்கள்
மழலைச் சொற் கேளாதவர்,

ஆதலின் எம்மொழி இளம்பிராயமாய்ப் பூர்ண வளர்ச்சி பெறவில்லையோ

அதனிடத்துத்தான் ஆண்டவனுக்கு அன்பு அதிகமாயிருக்கும், அதன் முன்னேற்றத்திலேயே அதிக கவனம் செலுத்துவான்.

கடவுளுக்குத் தமிழ்ப் பாசுரங்களைக் கேட்பதில் ஆநந்தம் அதிகம் என்று கூறினால் அதைவைத்து அவனுக்கு அயல் பாஷைக் கவிகளைக் கேட்பதில் ஆநந்தம் கிடையாது என்று கூறலாகுமோ? முன்னாளில் உலகமெங்குமுள்ள பெரியோர்கள் கடவுளுக்குப் பல பாஷைகளிலும் பாமாலை சூட்டவில்லையோ? தியாகராஜர் பாடிய தேனினுமினிய கீர்த்தனைகள் எல்லாம் தெலுங்கு பாஷையில் அல்லவோ செய்யப்பட்டன. துளசி தாஸரின் ஹிந்திப் பதங்கள், சீக்கிய குருக்களின் குருமுகிஸ்தோத்திரப் பாக்கள், சைதன்யரின் வங்கமொழிக் கவிகள் முதலியவைகளைக் கடவுள் புறக்கணிக்கவில்லையே! பாரசீக நூல்கள், அராபியச் செய்யுட்கள், ஹீப்ரூ கீர்த்தனங்கள் முதலியவைகளையும் முழுமுதற் கடவுள் செவி மடுத்து ஆநந்தித்ததாகவே சரித்திரம் கூறுகின்றது. இக்காலத்திலும் இவ்வுலகிலுள்ள பல பாஷைகள் பயிலும் பாவலர்கள் தங்கள் தங்கள் பாஷையில் பாமாலைகள் பாடுவதைப் பரம்பொருள் திருவுளங் கொண்டு ஏற்றுக்கொள்வதாகவே கூறவேண்டியிருக்கிறது. தற்காலத்தில் தமிழ் பாஷையில் செய்யப்படும் இன் கவிகளைவிட இதர பாஷைகளிலேயே நாளுக்கு நாள் அளவிட முடியாதபடி அதிகமாய் ஆக்கப்பட்டு ஆண்டவனுக்கும் ஆண்டவன் மக்களுக்கும் ஒருங்கே ஆநந்தம் அளித்து வருவது யாவரும் அறிந்த விஷயம். அதனால் ஆண்டவனுக்கு இந்நாளில் தமிழ் மொழியில் அன்பு குறைந்து அயல் மொழிகளில் அன்பு மிகுந்துவிட்டது என்று கூறமுடியுமோ? ஆகையால் கடவுளுக்குத் தமிழ் மொழியினிடம் மட்டுமே அன்புண்டு; மற்ற மொழிகளிடம் அவ்வன்பு கிடையாது என்று கூறுவது பெருந்தவறு.

### கடவுள் அற்புதங்கள் செய்தார்

என்பது தமிழ் மக்கள் தங்கள் தாய்மொழியின் பெருமைக்குக் கூறும் புராண காரணங்களில் மூன்றாவதாகும். முதல் இரண்டு காரணங்களையும் ஒப்புக்கொள்ள முடியாதது போலவே இதையும் ஒப்புக்கொள்ள முடியாது என்பது என் அபிப்பிராயம். அஃதெங்ஙனம் என்பதை அடுத்த வியாசத்தில் விளக்குவேன்.

## சந்தாநேயர் கவனிக்க

"ஆனந்தபோதினி" மாதசஞ்சிகை 15-வது ஆண்டுக்கு ஆடிமீ முதல் புதிதாகச் சேர்ந்திருக்கிற சந்தாநேயர்களின் சந்தா நம்பர்கள் மாற்றப்பட்டிருக்கின்றன. ஆதலால் ஷை சந்தாநேயர்கள் தயவுசெய்து தங்கள் தங்கள் புதிய சந்தா நம்பர்களைப் பார்த்து ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுமாறு வேண்டுகிறோம்.

மானேஜர்.

# பீதர் பட்டணத்தின் சிறப்பு.



(கதாரத்ன சே. கிருஷ்ணசாமி சர்மா.)

முற்காலத்தில் இந்திய நாட்டில் சிறப்புற்றோங்கிய நகரங்களுள் பீதர் பட்டணமும் ஒன்று. இது முன்னொரு காலத்தில் மகமதியர்களின் ஆளுகைக் குட்பட்டுத் தற்போது க்ஷீணமடைந்து, இன்றைக்கும் முன் சிறப்பை ஞாபக மூட்டி வருகிறது. இப்பட்டணமானது நிஜாம் இராஜதானிக்கு முக்கிய நகரமாகிய ஹைதராபாத்திற்கு மேற்குத்திக்கில் சுமார் அறுபதுமைல் தூரத்தி லிருக்கிறது. முன் இப்பட்டணத்தைச் சுற்றியிருந்த பாகங்கள் யாவும் ஹிந்து அரசர்களின் ஆட்சிக்கு உட்பட்டிருந்தன. மகாபாரதத்தில் வரும் நளசரித் திரத்திற்கும், பாகவதத்தில் வரும் ருக்மணி கலியாணத்திற்கும் சம்பந்தப் பட்ட விதர்ப்பதேசம், இக்காலத்தில் பீரார்-காண்டிஷ் (Berar-Khandish) என்றழைக்கப்படுகிறது. அக்பர் காலத்தில் பைஜீ (Faizi) எனனும் சரித்திர ஆராய்ச்சியாளர் "நலூ உத்தமன்" என்ற பெயரால் நளசரித்திரத்தை உர்து பாஷையில் எழுதி, தமயந்தியின் தந்தையாகிய பீமராஜன், பீதர்பட்டண பிராந்தியங்களை ஆண்டுவந்ததாகத் தக்க ஆதாரங்களுடன் விளக்கி இருக்கி றார். இதனால் இப்பட்டணம் தோன்றியது முதல் மகமதியர் காலம்வரைக் கும் இந்து மன்னர்களின் ஆட்சிக்கு உட்பட்டிருந்தமை நன்கு விளங்கும்.

பீதர் ராஜதானியின் தலைநகரம்:— பாமினி ராஜ்யத்தை ஏற்படுத்திய பின்பு, அதாவது கி. பி. 1429 வரையில் பீதர் பட்டணத்தைக் குறித்து சரித்திரங்களில் ஒன்றும் கூறப்படவில்லை. பாமினி சுல்தான்களில் 10வது அரசனாகிய அகமது வானி (Ahmed Wani) என்பார் 1428-ம்ஆண்டில் பீதர் நகரை இராஜதானியின் தலைமை நகரமாகச் செய்துகொண்டார். இதனைப் பற்றிய கன்னபரம்பரைச் செய்தி ஒன்று உண்டு. ஆனால் தற்கால சரித்திர ஆராய்ச்சியாளர் கன்னபரம்பரைச் செய்திகளை வெகுவாக நமபுவதில்லை. எனினும் அதனைக் கீழே குறிப்பிடுகிறேன். "ஒருசமயம் அகம்மது ஷா வேட்டையாடக் கானகம் சென்று விலங்குகளை வேட்டையாடும் போது ஓரிடத்தில் ஓர் செந்நாயைக் குள்ளநரி ஒன்று துரத்துவதைக் கண்டார். அது சமயம் ஆச்சரியங்கொண்டு நரியின் தைரியத்திற்கு மெச்சி இவ்விடம், தைரிய சாலிகளுக்கு இருப்பிடமென்றும், அவ்விடத்தே முக்கிய நகரமிருக்குமாயின் சத்ருக்கள் இடத்தைக்கண்டே பயங் கொள்வார்கள் என்றும் நினைத்து அவ் விடத்தில் ஒரு கோட்டை நிருமாணித்து அதற்கு 'அகம்மதுஷா பீதர்' என்று பெயரிட்டார்" என்பதுதான் அந்தக் கன்னபரம்பரைச் செய்தி.

## பட்டணத்தின்சிறப்பு.

குல்பர்க்காவிற்கு வடக்கில் சில மைல் தூரத்திலுள்ள இந்த பீதர் பட் டணம் மிகவும் அழகு நிறைந்தது. ஓர் சரித்திர ஆராய்ச்சியாளர் இதனைக் குறித்து எழுதுகையில் " இவ்வித சுந்தர நகரம் மற்றொன்று இல்லை என் றும், இது மாயையால் கட்டப்பட்டதோ என்று பார்ப்போர் பிரமை கொள்

ளத் தக்கதாக இருக்கிற"தென்றும் வரைந்துள்ளார்கள். பீதர் கோட்டையின் உட்புறம் மணிகளினால் கோடுகள் கட்டிச் செய்யப்பட்ட சித்திரவேலைகள் நிறைந்துள வென்று முன் சரித்திரக்காரர்கள் வரைந்துள்ள விஷயம் வாசிக்கும்போது நமக்கு முன்னோர்களின் சிற்ப சாதுரியம் நன்கு விளங்குகிறது.

## கோட்டை.

பீதர் நகரம் முற்காலத்தில் அழகு வாய்ந்திருந்தது என்பது க்ஷீணமாகிய பிராகார கோபுரங்களினாலேயே நன்கு விளங்கும். முதலில் கோட்டையைக் குறித்து ஆராய்வோம். இந்த அசம்மதுஷாவானி அரசபுரிந்துவருகையில் நிர்மாணிக்கப் பெற்றது. கோட்டையின் பிராகாரத்தைச்சுற்றி ஆழமாகிய அகழிகள் ஒன்றன் பின்னொன்றாக மூன்று அமைந்திருக்கின்றன. கோட்டையினுள் பெரிய பெரிய குளங்களும், தானியங்கள் பத்திரப்படுத்தக் கூடிய உக்கிராணங்களும், கோபுரங்களும் பண்டைய சிறப்பை நன்கு வெளிப்படுத்துகின்றன. அக்கோட்டைமீது எட்டுத் தடவை படைகள் சூழ்ந்தும் கோட்டையின் உட்புகுவதற்கு ஒருவருக்கும் சாத்தியமில்லாது போயிற்றென்று சரித்திரங்களே விளக்குகின்றன. பீஜப்பூரிலுள்ள "மல்லிக்" மைதானத்தைப் போன்று இக்கோட்டையிலும் ஓர் பெரிய மைதானமிருக்கிறது. இன்றைக்கும் அதன்மீது துருப்பிடித்த பீரங்கிகள் இருக்கின்றன. சிலவற்றின்மீது நிருமாணித்தவர்களின் பெயரும் செதுக்கப்பட்டிருக்கிறது.

## ரஞ்சன் மஹால்.

கோட்டையினுட் பிரவேசித்து சில வாயில்களைத் தாண்டியவுடன் "ரஞ்சன் மஹால்" என்றபெயருள்ள மண்டபமொன்று காணப்படும். இம்மண்டபம் முன் பல வர்ணசித்திரங்களால் அலங்கரிக்கப்பட் டிருந்தபடியால் இதற்கு அந்தப் பெயருண்டா யிருக்கலாம். அதற்கு கிழக்குத்திக்கில் மூன்று விசால மண்டபங்க ளிருக்கின்றன. ஆங்காங்கு இன்றைக்கும், சித்திரமாகாதகற்களால் கட்டப்பெற்ற மேடைகள்மீது ஆயில் பெயின்ட் செய்ததுபோல் அவ்வர்ணத்தில் சில சித்திரவேலைகளும், புஷ்பங்களும், கொடிகளும் காணப்படுகின்றன. இவை இப்போது செய்ததுபோல் பளபளப்புடனிருக்கின்றன.

## அரசமாளிகைகள்.

இக்கோட்டையின் வலது பாகத்தில் சில மாளிகைகள் காணப்படுகின்றன. அவை அரசரின் பந்துக்கள் தங்கி இருக்கக் கட்டப்பட்டனவாகும். இவைகளில் சிறந்தது "தர்பார் மஹால்" இதனை நேரில்கண்டு களிக்கவேண்டுமேயல்லாது எழுத்தால் விளக்குவது அசாத்தியமே. உட்புறம் முழுமையும், சுந்தரமாய்ச் சித்திரவேலைகள் செய்யப்பட்ட மரத்தூண்கள் நிறைந்திருக்கும். இம்மந்திரமானது பீஜப்பூரிலுள்ள அத்தர் மஹாலைப்போல் காணப்படும். உட்புறத்தில் வரிசையாக வெண்கற்களால் செய்யப்பட்ட புட்டிகள் இருக்கின்றன. அவைகளில் அத்தர் முதலிய பரிமள வஸ்துக்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. சுவர்களின் மீது ஆங்காங்கு பாரசீக பாஷையிலுள்ள வாக்கியங்கள் முத்துச்சிப்பிகளால் புதைக்கப்பட்டு விநோதமாகக் காணப்படும்.

## கச்சேரிகள்.

இம்மாளிகைக்குச் சிறிது தூரத்தில் காகன் மஹால், தாரகாஸ் மஹால், நாகன் மஹால் என்னும்படியாகிய மாளிகைகளிருக்கின்றன. இவை மகம

மதுவஷா பாமினியால் கட்டப்பட்டு இப்போது பாழடைந்திருக்கின்றன. சித்திரமாகாது நின்றிருக்கு மிடங்களில் அரசாங்கத்தின் கச்சேரிகளிருக்கின்றன. சமூத்திரம்போன்ற விசால தேசத்தை ஆண்டு கீர்த்திவாய்ந்த மன்னர்களின் சயனமந்திரம் தற்போதிய அரசாங்கத்தில் ஜில்லாச் சிறைக்கூடமாக மாறி யிருப்பது விசனிக்கத்தக்கது.

### அந்தப்புரம்.

மேற்கூறியவைகளை விடுத்து வேறு மார்க்கமாய்ப் போவோமானால் சிறிது தூரத்தில் ராஜமகிஷிகளின் அந்தப்புர மாளிகை காணப்படும். இவை இப்போது சித்திரவேலைகள் செய்யப்பட்டிருக்கின்றன. அதற்கிடையே 'தக்தீமஹால்' இருக்கிறது. இதில் பாமினி மன்னர்களும், பார்டிஷா மன்னர்களும் வீற்றிருந்த பளபளப்பான கற்களால் தயாரிக்கப்பட்ட சிம்மாசனங்களிருந்து வந்தன. இப்போது க்ஷீணமாய்க் கிடக்கிறது. மந்திரத்திலுள்ள கூண்டுகள் (Domes) மிகவும் பெரியவையாய்க் கண்களைப் பிரமிக்கச் செய்கின்றன. கோட்டை முழுமைக்கும் ஜலக்குழாய் (Pipe-system) ஏற்பாடு குறிப்படத்தக்கது.

### கோரிகள்.

இதன்பின் பாமினி சுல்தான்களின் கோரிகள் பார்க்கத்தக்கவையாகும். இவையாவும் ஒரே விதமாய் நாற்புறமாகக் கட்டப்பட்டு அழகிய கூண்டுகளோடும், வர்ணச் சித்திர வேலைகள் நிறைந்தும் உன்னதமாய் இருக்கின்றன. இதில் மிகவும் உன்னதமானது பீதர் பட்டணம் நிருமாணித்தவருடைய கோரியாகும். இது பாரசீகச் சிற்பமுறையில் கட்டப்பட்டிருக்கிறது.

### மதரஸா.

இப்பட்டணத்தில் சிறப்பாகக் கண்டுகளிக்க வேண்டியது கல்லூரி (College). இதனையே மதரஸா என்பர். இந்த பாரசீகம் அரேபியா தேசங்களிலுள்ளவைகளைப் போன்று மூன்று உப்பரிகைகளுடன் கட்டப்பட்டிருக்கின்றது. இதில் புத்தகசாலைகளும், உபந்நியாச மேடைகளும் ஆசாரிய பீடங்களும், மாணாக்கர் தங்குமிடமும் விநோதமானவை; காற்றும், வெளிச்சமும் இடையூறின்றி உள்ளேவரும். தற்போதிய விச்வபாரதி (சாந்தி நிகேதனம்) போன்று அந்நிய நாட்டு மாணாக்கர்களும் கல்விகற்க இவ்விடம் சேருவர். இவ்விடத்திய புத்தகசாலையில் 20 ஆயிரம் சிறந்த நூல்களிருந்தனவாம்; இப்போது ஒரு புத்தகமேனும் இல்லை. இம்மந்திரத்திற்கு இரு பாரிசங்களிலும் உன்னதமான தூண்க (Minarets) ளிருக்கின்றன. ஒவ்வொன்றும் நூறு அடி உயரம்.

### அழிவு.

1109ஹு கல்லூரிமீது ஓர் இடிவிழுந்து பின்பாகம் விழுந்து விட்டதாகக் கூறுவர். மற்றும் சிலர் ஔரங்கஜீபு பீதர்பட்டணத்தை ஜயித்தபோது இக்கல்லூரியில் வெடிமருந்துச் சாமான்களை வைத்ததாகவும் அது தீப்பற்றி நாசமானதாகவும் கூறுவர்.

### பாகாபாக்.

புராணங்களில் கூறப்பட்ட சந்தன வனத்தைப்போன்று பீதர் பட்டணமும் உத்யான வனத்துடன் சிறப்புற்று மேருமலைபோ லிருந்துவந்தது.

இப்போதும் அதைப்போன்ற ஓர் வனமிருக்கிறது. இவ்வனம் மலையின் அடிவாரத்திலிருப்பதால் ஜலக்குறைவின்றி செழித்துச் செடிகள் வளர்கின்றன. இதனைச்சேர்ந்த ஓர் பாகத்தில் முன் நரசிம்மஸ்வாமி ஆலய மொன்றிருந்தது. 1556-ம்ஆண்டில் ஔரங்கஜீப் இந்நகர்மீது படையெடுத்த போது இவ்வாலயம் மசூதி யாக்கப்பட்டு 'பரகாபாக்' என்னும் நாம மளிக்கப்பெற்றது. 'பரகா' என்றால் உர்தில் சுவர்க்கமாம்.

## தொழில்கள்.

இந்நகரத்தில் முக்கியதொழில் 'பீதரீ' என்பதாம். பஞ்சலோகத்தால் செய்யும் பாத்திர வேலைகள் இங்கே விசேஷம், இப்போது இத்தொழில்களும் நசித்து விட்டன.

## மகமதியப் போர்ப்படை.

1323ஆல் மகம்மது டாக்லக் இதனை வசப்படுத்திக் கொண்டதினின்றும் சரித்திரங்கள் காணப்படுகின்றன. ஔரங்கஜீபு படை எடுத்து நாசப்படுத்திய பட்டணங்களில் இதுவும் சேர்ந்தது. இது 1556ல் நடைபெற்றது.

## பூர்வ சரிதம்.

[டோக்லக் சக்கிரவர்த்தியால் 45 வருடகாலம் குல்பர்கா-பீதர்களுக்கு பிரதிநிதியாக நியமிக்கப்பெற்றவர்க ளிருவர் பொறாமை கொண்டு மன்னன் கோபத்திற்காளாகி விலக்கப்பட்டார்.] 1346-ல் ஜாபர்கான் அல்லாவுதீன் பாமினீஷா என்னும் பட்டத்துடன் காகதீய வம்சத்தைச் சேர்ந்த ஓரங்கல்லு அரசன் சகாயத்தால் சக்கிரவர்த்தியின் சேனைகளைத் (Royalists) தோற்கடித்து நஜீருத்தீன் 'இஸ்மாயில்' என்னும் சர்தார் சகாயத்தால் டக்கனுக்கு அரசனானன். அவன் இந்நகரை நான்காகப்பிரித்து பீதருக்கு ஒருவரை நியமித்து அவருக்கு 'அஜாமி ஹூமாயூன்' (ஜயசீலன்)என்னும் பட்டமளித்தான்.

## அல்லாவுத்தீன் ஆட்சி.

1435-ல் அகம்மதுஷா இறந்து விட்டார். அவருடைய கடைசிப் புதல்வன் அல்லாவுத்தீன் பட்டத்திற்கு வந்தான். இவனும் புதிய பட்டணமும் பல மாளிகைகளும், கல்லூரிகளும், வனங்களும் நிருமாணித்து அவைகளின் பரிபாலனத்துக்கு என்று ஏராளமாகப் பூதானமும் செய்தான். இவன் தயாள குண முடையவனாயினும் கொடுஞ்சித்தம் படைத்தவன் என்பது கீழ்க் காணும் விஷயத்தால் விளங்குகிறது. 1459ல் ஹூமாயூன் தன் படைகளுடன் கிளர்ச்சித் தலைவனாகிய தெலிங்கான ஜமீன்தாரை ஜயிக்கப் படை எடுத்த போது பீதரில் ஓர் கலகம் நேர்ந்தது. அதை அல்லாவுத்தீன் கேள்வியுற்று பீதர்சென்று பட்டண காவலாளிகள் (City Police) இரண்டாயிரம் நபர்களை அஜாக்கிரதை என்னும் குற்றத்திற்காகக் கொலை செய்தான். மணியகாரரை (கொத்வால்) சிறையிலடைத்து சித்ரவதை செய்வித்தான். கலகத்திற்குக் காரணமாகிய தன் இளையசகோதரனைப் புலிவாயிலிட்டான். குற்றமற்ற பெண்களை அவமானப்படுத்தி, வீட்டைவிட்டுத் துரத்திப் பல துன்பங்களைச் செய்தான். 1466-ல் இக்கொடியவன் காலமானன்.

## நைஜாம்ஷா மகம்மது ஷாக்களின் ஆட்சி.

ஹுமாயூன் காலமானபின் அவர் புதல்வன் பட்டத்திற்கு வந்தான். மூத்தவனாகிய நைஜாம்ஷா பட்டத்திற்கு வந்ததும் சிலநாளில் மரணமடைந்ததால் இளையவனாகிய மகம்மதுஷா பட்டத்திற்கு வந்தான். இவரது காலத்தில் பாமினி சுல்தான்களின் கீர்த்தி நாற்புறங்களிலும் சிறந்தோங்கியது. இதற்குக்காரணம் இவருடைய மந்திரியேயாம். 1469-ல் மந்திரி 'காவானி' கொங்கணத்தையும் விஜய நகரத்தையும் ஜயித்து ஆளுகையைப் பரவச்செய்தார். இம்மந்திரிமீது சில சர்தார்கள் பொறாமைகொண்டு சூழ்ச்சிசெய்து இவரைத் தொலைத்தனர். காவானி நான்கு அரசர்களுக்கு மந்திரியாய் இருந்து பாமினி சுல்தான்களுக்கு கீர்த்தி யுண்டாக்கினர். 78 வயதில் இவர் மரணமடைந்தார். இவர் மரணத்திற்கு துருக்கி, ஆப்கானிஸ்தானம், பாரசீக மன்னர்களும் விசனித்தனர். இதனால் நமக்கும் பிற நாடுகளுக்கும் அப்போதே சம்பந்தமுண்டு என்பது விளங்கும்.

## 2-வது மகம்மதுஷா ஆட்சி.

மகம்மதுஷா கடைசிப்புதல்வர் 2வது மகம்மதுஷா பட்டத்திற்கு வந்தார். இவர் பொம்மைபோல் மந்திரி 'நைஜாமுல்முல்க் பெகரீ' சொன்னபடி நடந்துவந்தார். இவர் காலத்தில் பல துன்பங்களுக்கு தேசம் அடிபணிந்தது. சாமர்த்திய மற்றவராகையால் பாமினி சுல்தான்களின் கீர்த்தியும் இவருடன் நாசமடைந்தது. 1490-ல் அபிசீனியரும், தக்கன் சர்தார்களும் ஒருங்கே யோசித்து முன் சக்கிரவர்த்தியின் சந்ததியில் சேர்ந்த ஒருவனை அரசனுக்க நினைத்துக் கிளர்ச்சிசெய்து மகம்மதுஷாவைக் கொல்ல நினைத்தனர். அதை அறிந்து மகமது எதிரிகளைவென்று தேசத்தைத் தனது ஆப்தனுக்கு அளித்துச் சுகபோகங்களில் ஆழ்ந்தார். டில்லி, லாகூர் பட்டணங்களினின்றும் விலை மாதர்களை அழைத்துவந்து உல்லாசமாய் இருந்து வந்தார். அப்போதே தேசம் திருடர்களால் ஆக்கிரமிக்கப்பட்டது. தர்பார் மாளிகையில் கள் பாண்டங்கள் நிறைந்திருந்தன. மதகுருக்களும் கல்லூரி ஆசிரியர்களும் குடிவெறி கொண்டு தமதுவேலையை விடுத்து அரசனுடன் சேர்ந்து கொண்டனர். தேசத்தில் அராஜக மேற்பட்டு விட்டது. இதன் பலனாய் தெலிங்கானா ஜில்லாவும் பீதரைச் சுற்றுமுள்ள பிரதேசங்களும் ஷாவின் ஆளுகையை விட்டுப் பிரிந்தன.

## பீஜப்பூர் சுல்தான்.

நைஜாமுல்கு மந்திரிக்குப்பின் காசிம் பாரிது மந்திரியானார். இவர் காலத்தில் பீரார், பீஜப்பூர், அகமது நகரங்கள் சுயஉரிமை பெற்றன; ஷாவுக்குப் பின்னர் சுல்தான்கள் ராஜ்ய மாண்டனர். பின் ராஜ்யம் மந்திரிகளுக்கு ஆதீனமாய் பீஜப்பூர் சுல்தான் வசமாயிற்று.

## ஹைதராபாத் நைஜாம்.

1659-ல் ஔரங்கஜீப் மிக்க கஷ்டங்களுக்குட்பட்டு 27 நாட்கள் கோட்டையைச் சுற்றிப் படையெடுத்து சுவாதீனம் செய்துகொண்டார். பின் காலக்கிரமத்தில் நைஜாம் சுய உரிமைபெற சுற்றுமுள்ள நகரங்களுடன் பீதரும் ஹைதராபாத் நைஜாமுக்கு வசமாயிற்று.



# தமாஷ் பேச்சு.

இரண்டு குழந்தைகள் பேசிக்கொண் டிருந்தார்கள்.

ராமன்:—" அதுதான் "

சீதை:—" அது அல்ல "

ராமன் :—" அதுதான் என்று நான் சொல்லு கிறேன். ஏனென்றால் அம்மா அதுதான் என்று சொன்னாள். அம்மா அதுதான் என்று சொன்னால் அது அல்லாமல் இருந்தாலுங்கூட அதுதான் "

***

" நான் ஒரு புதுக்கார் வாங்கலாம் என்று நினைக்கிறேன் "

" ஏன் ? உன்னிடம் இருந்த கார் கெட்டுப் போய் விட்டதா ?"

" இல்லை. என்ன செய்தும் அதற்குப் பணங்கட்டவே முடியவில்லை "

***

எஜமானி:—"புதிதாக இப்போது வந்திருக்கிற வேலைக்காரி ரொம்ப நல்லவள். வெகு அடக்கம் !"

மற்றவள்:—" ஆமாம் ! வெகு அடக்கம் அணுவளவும் அவளால் யாருக் கும் தொந்தரவில்லை. பெருக்கும் போது குப்பை கூளங்களுக்குங்கூட அவள் தொந்தரவு கொடுக்க விரும்புவதில்லை."

***

சிவராமன்:—" அதோ அங்கே போகிறானே அந்தக் கிழட்டு வைதிகப் பிடுங்கல்—அவன் எனக்குச் சேரவேண்டிய ஐயாயிரம் ரூபாயை அமுக்கிக் கொண்டான்."

நண்பன்:—" அப்படியா ! எப்படி அமுக்கிக்கொண்டான் ?"

" அவனுடைய மகளை எனக்குக் கொடுப்பதாகச் சொல்லிவிட்டுப் பிறகு மறுத்து விட்டான்! "

***

வாத்தியார் ஒரு டாக்டர் மகன்மீது மிகவும் கோபங்கொண்டு,

" இனி நான் கண்டிப்பாய் உன் அப்பாவை இங்கு வரவழைத்து உன் யோக்கியதையைத் தெரிவிப்பேன்.

பையன்—சார் ! சார் பாவம் வேண்டாம் ! அவர் இங்கு வந்து போவ தற்கு 5-ரூபாய் " சார்ஜ் " செய்து " பில் " அனுப்பி விடுவார்.

***

" எல்லாம் துறந்த தியாக புருஷன் யார்? "

" அசந்தர்ப்பமாய்—ஓயா மாரியாய் சளசள என்று தன் பெருமை பேசும் ஓட்டை வாயனுக்கு " உம் " கொடுத்துக் கொண்டிருப்பவன் தான் உலகில் சிறந்த தியாக புருஷன் "

***

பையன்:—"நான் வரவர நல்லபையன் ஆகிவிட்டேன் அல்லவா ஐயா?

தகப்:—" ஆஹா ! சந்தேக மென்ன ?"

"என்னை நம்புகிறீர்கள் அல்லவா?"

"ஆம்."

"அப்படியானால் சிகரெட்டுகளை பீரோவின் உச்சியில் ஏன் வைத்து விடுகிறீர்கள்?"

* * *

பையன்:—"அம்மா! நீ நேற்று "தாகத்தோடு இருக்கிற பசுவுக்குத் தண்ணீர் வைப்பது புண்ணியம் என்று சொன்னாயே!"

தாய்:—"ஆமாம் கண்ணே! சந்தேகம் என்ன?"

பையன்:—"அப்படியானால் பூனை அதிக தாகத்தோடு கத்துகிறது, சட்டியில் இருக்கும் பாலைக் குடிக்கும்படி செய்கிறேன்."

* * *

நண்பன்:—"உனக்கு எப்போதாவது ரயிலில் விபத்து நேர்ந்ததுண்டா?"

மற்றவன்:—"ஆமாம்! ஒரே ஒரு தடவை. நான் புது மாப்பிள்ளையாயிருந்த சமயத்தில் மாமனார் குடும்பத்தோடு ஸ்தல யாத்திரை செய்தோம். ரயில்வண்டி ஒரு இருண்ட மலைக்குகையில் போய்க்கொண்டிருக்கும் போது என்னுடைய காதலியின் கையென்று மாமியார் கையைப்பிடித்து இழுத்துக் கிள்ளி விட்டேன்."

* * *

வாத்தியார்:—(உள்நாட்டுக் கலகம் என்றால் என்ன என்பதை விளக்கி விட்டு) சரி! தமிழ் நாட்டில் ஜில்லாக்கள், நகரங்கள் தோறும் குழப்பமும் சண்டையும் ஏற்பட்டால் அதற்கு என்ன என்று பேர்?

ராமன்:—'எலெக்ஷன் சார்!"

* * *

வாத்தியார் கண்ணனுடைய காப்பிநோட்டைப் பார்த்துவிட்டு,

"கண்ணா இது யாருடைய எழுத்து? உன்னுடைய சகோதரி எழுத்து என்று எனக்குச் சந்தேகமாயிருக்கிறது!

கண்ணன்:—(அச்சக்குறிப்புத் தோன்ற) நான் அவளுடைய பேனாவை எடுத்து எழுதினேன், அதனால் அப்படியிருக்கும்போ லிருக்கிறது சார்!"

* * *

இரண்டு நண்பர்கள் ஒரு மலை வழியில் சைக்கிள் சவாரிசெய்து தளர்ச்சி அடைந்து சளைத்துப் போனார்கள்.

ஒருவன்—மூர்த்தி! தயவுசெய்து மன்னிக்க வேணும். இந்த இழவுமலை இவ்வளவு உயரம் இருக்குமென்று யாருக்குத்தெரியும்? படத்தில் பார்க்கும்போது எல்லாம் சமமாகவே இருந்தது!"

* * *

இப்போது நானும் என் அருமைக்காதலியும் உத்தமமான சுகவாழ்க்கை நடத்துகிறோம்.

"எப்படி?"

"இப்போது அவள் என் சப்பைமூக்கைக்கண்டு விண்ணாணம்பேசி எட்டிக்குப் போட்டி செய்து தொல்லை கொடுப்பதில்லை. நானும அவள் என்ன செய்து கொண்டாலும் மூச்சுவிடுவது கூட இல்லை" (லி. ரா.)





## கிருஷ்ணலிங் அல்லது துப்பறியும் சீடன்.

(318-ம் பக்கத் தொடர்ச்சி)

**ஆரணி-குப்புசாமி முதலியார்.**

பிறகு ஆனந்தலிங் கிட்டுவின் ஜோபியிலிருந் தெடுத்த கடிதத்தையும் பிச்சனிடமிருந்தகப்பட்ட பத்தொன்பதினாயிரம் ரூபாய் நோட்டுகளையும் ஒரு சிறுசிப்பமாய்க்கட்டி சாமான் இருந்த ஒரு மூலையில் மிக்க அலட்சியமாய் எறிந்துவிட்டு இராஜவேலை நோக்கி "இவை யென்னமோ உதவாதவைக ளென்று குளிர்காயும் நெகிடியில் போட்டுக் கொளுத்தி விடாதே. இச் சிப்பம் பல ஆயிரம் ரூபாய்கள் பெறும்" என்று புன்னகையோடு கூறினான்.

இராஜவேல்:—அப்படிப்பட்டதை யெங்கேனும் இம்மாதிரி குப்பை செத்தைக ளிருக்கு மிடத்தில் வெளியில் எறிந்து விடலாமோ? மறைவான விடத்தில் பத்திரமாய் வைப்பதுதானே.

ஆனந்:—மறைத்து வைக்கிற பொருள் எப்படியும் கண்டு பிடிக்கப் படும். இப்போது யாராவது இதைத் தேடியே வந்தால், அவன் கட்டாயம் மறைவான விடங்களில்தான் தேடிப்பார்ப்பானே யொழிய குப்பையான விடத்தில் பார்க்கவே மாட்டான்.

ஆனந்தலிங் பேசிக்கொண்டே முரட்டுத்தனமுடைய ஒரு சாதாரண கைத்தொழில் செய்பவன்போல் மாறுவேட மணிந்து.

"ஆ! முனியன் விழித்துக்கொண் டிருந்தால் விலங்கையும் கட்டுகளை யும்பற்றி யென்ன நினைப்பானோ தெரியவில்லை. மருந்து கொஞ்சம் தாராள மாகவே கொடுத்திருக்கிறேன். ஆகையால் கட்டுகள் நோயுண்டாக்கா திருந்தால் இன்னும் நித்திரையிலேயே யிருப்பான். அப்படி யிருந்தால் சுலபமாய் எழுப்பி வருவேன்" என்று தனக்குத்தானே கூறிக்கொண்டான். அவன் மூகராக் கொடுக்கும் மருந்திற்கு முறிப்பு மருந்து எப்போதும் கையில் வைத்துக் கொண்டே யிருப்பது வழக்கம்.

அவன் "நான் நினைக்கிறேன் அந்தக் குள்ளன் போய் பிச்சனை யெழுப்பி விட்டான்போ லிருக்கிறது. இந்தத் துஷ்டப் பயல்களிடம் மட்டும் நான் ஏமாந்து சிக்கிக்கொண்டால் கட்டாயம் என் தந்தையை யனுப்பிய விடத்திற்கு என்னையும் அனுப்பி விடுவார்கள்" என்று தனக்குள் சிந்தித்துக் கொண்டான்.

மாலை அவன் ஹோட்டலில் ஒருதினசரி பத்திரிகையை வாசித்த போது தன் தந்தை கொல்லப்பட்டிருந்த விஷயம் பிரசுரம் செய்யப்பட் டிருக்கக் கண்டான். அதை வாசிக்க அவனுக்குப் பிரியமில்லை யேனும் ஒருவித ஆவல் அவனைத் தூண்டியது. பிறகு மெதுவாய் தன் தந்தை நினைப்பை மறந்துவிட்டுத் தன் ஏற்பாடுகளைப் பற்றிச் சிந்தித்தான்.

அவன் ஏற்பாட்டின்படி அவன் தன் தந்தையின் சவக்கிரியைக்குச்செல்லலாகாது. அவனுக்கும் இறந்தவருக்கு முள்ள சம்பந்தமே யாருக்கும் தெரியலாகாது. இதற்குக் காரணங்களை யெல்லாம் விவரமாய் எழுதி போலீஸ் இன்ஸ்பெக்டருக்கு அனுப்பினன். அவர் அவ்வாறே ஒப்புக்கொண்டு, நம்பிக்கையான ஒரு தக்க மனிதனைக் கொண்டு சவத்தை யடக்கம் செய்யவேண்டிய வேலையைச் செவ்வனே திருப்திகாமாய் நிறைவேற்றினர்.

ஆனந்தஸிங் முரட்டாளின் மாறுவேடத்தோடு ஹோட்டலை விட்டுப் புறப்பட்டு நேராய் இராஜவேல் வசிக்கும் வீட்டிற்குச் சென்றான். அவன் ஆழ்ந்த சிந்தனையோடு சென்றதால் வழியில் இரண்டு மனிதர்கள் தன்னைக் கண்டு திடுக்கிட்டுத் துரிதமாய் இருட்டில் போய் மறைந்து கொண்டதை யவன் கவனிக்கவில்லை.

ஆனந்தஸிங் இராஜவேல் வீட்டின் படியேறியபோது, பின்னால் தொடர்ந்து வந்த இருவரில் குள்ளன் பிச்சனை நோக்கி "அங்கேதான் இராஜவேல் வசிப்பது" என்றான்.

பிச்சன்:—இவன் அங்கு என்ன செய்யப் போகிறானோ தெரியவில்லை.

குள்ளன்:—"இராஜவேலைப் பார்க்கப் போகிற னாக்கும்—இல்லை—" என்று பிச்சன் தோளைப்பற்றி "இந்தப்பயல் முனியனை யெங்கோ மறைத்து வைக்க இராஜவேலுக்குத் துணையாயிருந்தா னல்லவா?" என்றான்.

பிச்சன்:—"அப்படித்தா னிருக்கவேண்டும்—ஆ! ஏன் குள்ளா—இந்தத் முரட்டுப் பயல், என்னைப்போல் மாறுவேட மணிந்து அந்தவண்டியை யோட்டிக்கொண்டு போனவனாக இருக்க வேண்டும்" என்றான்.

குள்ளன்:—அதுதான் நான் கூறுவது. ஏன்! இவன் முரடனு மல்ல யாருமல்ல இவன் ஒரு துப்பறிபவனாக விருக்கவேண்டும். இவன் இங்கு ஏன் செல்கிறானென்று உனக்கு இப்போது தெரிய வில்லையா?

பிச்சன்:—எனக்குத் தெரியவில்லை.

குள்ளன்:—முனியன் இந்த வீட்டிற்குள் இருக்கிறான். உண்மையே.

பிச்சன்:—"அப்படியாயின் நாமும் போவோம்" என்று கூறிக்கொண்டே ஆத்திரத்தோடு பாய்ந்து சென்று படிகளிலேறப் போனான்.

குள்ளன்:—"பிச்சா போகாதே, வா வா." யென்று அவனை யழைத்து "முன்னே நீ யிவன் ஒரு துப்பறிபவனா யிருக்குமென்று கூறினையல்லவா?" என்றான்.

பிச்சன்:—"ஆம் கூறினேன்."

குள்:—இப்போது அவன் வாட்டமாய் நம்மிடம் சிக்கிக்கொண்டானென்று எண்ணிக் கொண்டாயோ?

பிச்:—ஆம் சந்தேகமென்ன?

குள்:—அப்படியானல் துரிதமாய்ப் பாய்ந்து ஏறிப்போ.

பிச்:—ஏன் அவன் என்ன செய்து விடுவான்?

குள்:—என்ன செய்வானா? ஏன் உன்னை யழுத்திக் கொல்வான்.

பிச்:—அப்படியாயின் நீ என்ன செய்ய வேண்டுமென்கிறாய்?

குள்:—பேசாமல் நான் சொல்கிறபடி செய்; நான் உன்னை முட்டாளென்றாவது, பலமற்றவனென்றாவது, தைரியமில்லாதவனென்றாவது கூற

வதாய் நினையாதே. ஆனால் உனக்குப் போதுமான சூது, வாது, தந்திரங்கள் தெரியாது. இப்படிக் கூறினேனென்று என் மேல் கோபிக்காதே..........''

பிச்:—குள்ளா! சூது வாது முதலியவற்றில் நீ கெட்டிக்காரன் தான். உன் பிரசங்கத்தை விட்டு விட்டு, நடக்கவேண்டிய தென்ன வென்பதைக் கூறு.

குள்:—"முன்னே நான் மெதுவாய்ச் சென்று அங்கென்ன நடக்கிற தென்று கண்டறிந்து வருகிறேன். பிறகு அவனுக்குத் தந்திரமான வலை வீச யோசிக்கலாம்; அது வரையில் நீ வெளியிலேயே யிரு'' என்றான்.

பிச்சன் குள்ளன் கூறுவது சரியே யென்றுணர்ந்து அப்படியே நடப்பதாய் ஒத்துக்கொண்டான்.

---

## 13-வது அத்தியாயம்.

குள்ளன் பூனை போல் பதுங்கிக்கொண்டே மாடி மேல் ஏறிச்சென்று அங்கிருந்த அறையின் கதவின் பூட்டுத் துளையில் செவியை வைத்து உற்றுக்கேட்டான். இவனுக்குப் பிரியமான சில சங்கதிகள் இவன் செவிகளில் விழுந்தன.

ஆனந்தவலிங் வீட்டிற்குள் சென்றதும் தன் சுபாவ குணத்தை யடைந்து மிக்க எச்சரிக்கையோடு சந்தேகப்படத்தக்க சத்தம் ஏதேனும் உண்டாகிறதா வென்று உற்றுக் கேட்டுக்கொண்டே படிகளில் ஏறிச்சென்றான். பிறகு இராஜவேல் அறையின் கதவருகில் நின்று உற்றுக் கேட்டு சாவியை யெடுத்துச் சந்தடி செய்யாமல் கதவைத் திறந்து உள்ளே சென்று தீபத்தை யேற்றிப் பார்த்தான். அங்கிருந்த எல்லா வஸ்துக்களும் அதது இருந்த விடத்திலேயே இருந்தன. முனியன் மட்டும் இவனைக் கண்டு மிரள மிரள விழித்துக்கொண் டிருந்தான்.

ஆனந்தவலிங் அறையின் கதவை மூடிப் பூட்டிக்கொண்டு படுத்திருக்கும் முனியன் எதிரில் சென்று நின்று அவனை நோக்கி, "நான் உன் வாயடைப்பை யெடுத்துவிடப் போகிறேன். ஆனால் நீ சற்றேனும் சந்தடி யுண்டாக்கினாயோ உடனே பழையபடி அடைத்துப் போய்விடுவேன். பிறகு தற்செயலாய் யாரேனும் வந்தால் தான் நீ விடுதலையடைய வேண்டும்'' என்று கூறிக்கொண்டே அவன் வாயடைப்பை யெடுத்துவிட்டு, "இப்போது நீ முதலாவதாய் எனக்கு வர்த்தமனிக்க வேண்டும்'' என்றான்.

முனியன்:—நீ யார்? என்னை யெழுந்து உட்காரும்படி விடமாட்டாயோ?

ஆனந்த:—இன்னும் வேளை வரவில்லை. நான் யாரா? ஏன் நமது நண்பனாகிய பிச்சன் எனக்கு முரட்டாள் என்று பெயரிட்டிருக்கிறான்.

முனியன்:—பிச்சன் ஏன் என்னை யிங்கு இப்படி வைத்திருக்கிறான்?

ஆனந்:—அதைப் பற்றி அவனைக் கேள். இப்போது நான் உனக்குச் சில புத்திமதிகளைக் கூறுகின்றேன். அதாவது துஷ்ட சகவாசங்களை விட்டு விலகி விடு. இன்றேல் நீ யொரு நாளைக்குச் சிறைவாசத்திற்குச் செல்வாய்.

முனி:—நான் இப்படி கட்டப்பட்டிராவிட்டால் நீ தைரியமாய் இம்மாதிரி கூறமாட்டாய். (தொடரும்.)



# வர்த்தமானப்பகுதி

### 90 வயது காதலர்கள்:—

ஜர்மனியைச் சேர்ந்த ஒரு நகரத்தில் 65 வருஷங்களுக்குமுன் 26 வயதான ஜாகப்வார்ட்ஸ் என்பவர், தன்னிடம் காதல் கொண்ட தன்னிலும் ஒரு வயது இளையாளான பிரீடாகிமிட் என்னும் மாதினிடம் தாம் திரும்பி வருமளவும் விவாகம் செய்து கொள்ளாமல் காத்திருக்கும்படியும், தான் பொருள் திரட்டிக் கொண்டுவந்து விவாகம் செய்து கொள்வதாகவும் கூறி அமெரிக்காவுக்குச் சென்றார். அவர் இப்போது சமீபத்தில் தனது 91 வயதில் திரும்பிவந்து தன் காதலியை மணந்துகொண்டார்.

***

### சினிமாவில் பெயர் பெற்ற கசாப்புக்காரர்:—

ஸ்ரீ. கோல்டிங் என்பவர் இப்போது அமெரிக்காவில் சினிமாக் காட்சியில் பெயர் பெற்றவராகவும், பெரிய தனவானாகவும் இருக்கின்றார். அவர் சமீபத்தில் லண்டனுக்கு வருவதாகத் தெரிகிறது. அவர் இங்கிலாந்தைச் சேர்ந்த செல்ஸி என்னுமிடத்தில் ஒரு கசாப்புக் கடையில் வேலை செய்யும் ஊழியராக இருந்தார். அப்போது அவருக்கு வயது பதினான்கு. ஐரோப்பா யுத்தத்துக்குப் பின்னர் அவர் அமெரிக்காவுக்குச் சென்று சினிமாவில் சேர்ந்து விரைவில் நல்ல கியாதி பெற்றுவிட்டார். அவர் இரண்டொரு காட்சிகளையும் நூலாக எழுதியுள்ளார்.

### உலகத்திலேயே மிகச் சிறிய நந்தவனம்:—

காலிபோர்னியாவைச் சேர்ந்த விசாலியா என்னும் நகரில் ஒரு பொது நந்தவன மிருக்கின்றது. அதுதான் உலகத்திலுள்ள எல்லா நந்தவனங்களைவிட மிகச் சிறியதென்று சொல்லப்படுகிறது. அதில் ஒரே ஒரு பழைய மரம் இருக்கின்றது. அது ஒன்பது அடி நீளமும், ஆறு அடி அகலமு முள்ளதாக இருக்கின்றது.

***

### பேச்சை அறியும் இருப்புப் பாதை:-

சாதாரணமாக இருப்புப் பாதைகள் எனச் சொல்லப்படும் ரயில் வண்டித் தொடர்கள் நீராவியின் உதவியினால் ஓடுகின்றன. ஆனால் சமீபத்தில் மின்சார உதவியால் ஓடக்கூடிய ரயிலைச் கண்டு பிடித்திருக்கின்றார்கள். இப்படி மின்சாரத்தால் ஓடும் ரயிலிலும் சில மனிதர்கள் வாயால் கட்டளை யிட்டதும் அக்கட்டளைக்கு அவை உட்படும்படியும் செய்ய ஏற்பாடு செய்து வருகிறார்கள். சமீபத்தில் லண்டனில் அத்தகைய ரயில் ஒன்றைக் காண்பித்தார்கள். 'நில்' என்று சொன்னதும் அந்த ரயில் நின்று விடுகின்றது. அவ்வாறே 'பின்னே திரும்பு' என்றால் பின் புறமாகத் திரும்பி விடுகின்றது. இது சிறு சத்ததைப் பெரிதாகக் கேட்கும்படி செய்யும் சாதனமாகிய இயந்திரத்தால் நடைபெறுகிற தென்று தெரிகிறது.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

**சுக்கில௵ தை௴—கலியுகாதி 5031, சாலிவாகனம் 1852,**
**பசலி 1339—கொல்லமாண்டு 1105—ஹிஜரி 1348,**
**இங்கிலீஷ் 1930௵ ஜனவரி௴—பிப்ரவரி௴**

| தேதி | ஜனவரி | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | செவ் | சது2-38 ○53-0 | திரு8-45 | மா8-45சி | பௌர்ணமி, கரிநாள், உத்ராயண புண்யகாலம் சங்கராந்தி பண்டிகை |
| 2 | 15 | புத | பிர43-10 | புன1-15 பூச52-55 | சித்60 | கரிநாள், தைப்பூசம், மாட்டுப்பொங்கல் [செய்ய |
| 3 | 16 | வியா | துதி33-40 | ஆயி45-30 | அ40-35சி | கரிநாள், நவக்கிரகசாந்தி |
| 4 | 17 | வெ | திரி25-8 | மக39-5 | மா39-5சி | சுபகாரியங்கள் விலக்க |
| 5 | 18 | சனி | சது17-58 | பூர34-3 | சி34-3மா | சங்காஷ்ட சதுர்த்தி |
| 6 | 19 | ஞா | பஞ்12-30 | உத்30-43 | அமி60 | |
| 7 | 20 | திங் | சஷ்9-0 | அஸ்29-30 | சி29-30பி | |
| 8 | 21 | செவ் | சப்7-35 | சித்30-23 | சித்60 | |
| 9 | 22 | புத | அஷ்8-5 | சுவா33-10 | சித்60 | |
| 10 | 23 | வியா | நவ10-38 | விசா37-38 | சித்60 | |
| 11 | 24 | வெ | தச14-40 | அனு43-30 | சி43-30ம | |
| 12 | 25 | சனி | ஏகா19-50 | கே50-13 | சித்60 | |
| 13 | 26 | ஞா | து25-48 | மூல57-25 | அ57-25சி | |
| 14 | 27 | திங் | திர32-10 | பூரா60 | மா60 | |
| 15 | 28 | செவ் | சது38-35 | பூரா4-55 | சித்4-55அ | |
| 16 | 29 | புத | அ●44-55 | உத்12-23 | அ12-23சி | சர்வத்திர தை அமாவாசை |
| 17 | 30 | வியா | பிர51-0 | திரு19-38 | சித்60 | மாகசுத்தம், கரிநாள் |
| 18 | 31 | வெ | துதி56-33 | அவி26-38 | சித்60 | சந்திர தெரிசனம் 4-ம் பிறைபோல் தெரியும் |
| | 1930௵ பிப்ரவரி | | | | | |
| 19 | 1 | சனி | திரி60 | சத33-0 | அ33-0மா | வியாதியஸ்தர் குளிக்க |
| 20 | 2 | ஞாய | திரி1-28 | பூர38-48 | சி38-48அ | மாச சதுர்த்தி விரதம் |
| 21 | 3 | திங் | சது5-43 | உத்43-43 | சித்60 | மதன பஞ்சமி, சர்வமுகூர்த் |
| 22 | 4 | செவ் | பஞ்8-55 | ரே47-25 | சித்60 | சஷ்டி [தம் |
| 23 | 5 | புதன் | சஷ்10-48 | அஸ்49-53 | மா49-53சி | சுபகாரியங்கள் விலக்க |
| 24 | 6 | வியா | சப்11-3 | பர50-33 | சி50-33ம | ரதசப்தமி, மஹா சப்தமி |
| 25 | 7 | வெ | அஷ்9-30 | ※கி49-23 | சி49-33ம | கிருத்திகை சுரங்கம்வெட்ட |
| 26 | 8 | சனி | நவ6-13 | ரோ46-30 | அ46-30சி | மாடுகொள்ள |
| 27 | 9 | ஞா | தச1-10 ஏகா54-30 | மிரு42-0 | சித்60 | ஸ்மார்த்த ஏகாதசி, அவமாகம், விவாகம், சீமந்தம் |
| 28 | 10 | திங் | து46-35 | திரு36-3 | சித்36-3அ | வைஷ்ணவ ஏகாதசி |
| 29 | 11 | செவ் | திர37-40 | புன29-10 | சித்60 | பிரதோஷம், அவமாகம் |

| | | | |
|---|---|---|---|
| | ராகு | குரு | |
| சூரி புத | 5-மகர-சுக்<br>15-மகர-செ<br>18-தனு-புத<br>23-மகர-புத<br>29-கும்-சுக் | | |
| சுக்-ச செவ் | | கேது | |

**PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,**
**AT THE "ANANDA BODHINI" POWER PRESS,**
**LAWYER CHINNATHAMBI MUDALI ST., MADRAS.**